# சங்கொலி



நாமக்கல் கவிஞர்

வெ. இராமலிங்கம் பிள்ளை

அவர்களின்

கவிதைத் தொகுதி

தமிழ்ப் பண்ணை

தியாகராயநகர். ★ சென்னை

# நமஸ்காரம்

ஓம்ஓம் ஓமென ஒலிக்குது சங்கு !
பூம்பூம் பூமெனப் பொங்குது சங்கொலி.
காந்தியின் சாந்தக் கதிதரு வழியை
தேர்ந்து தெளிந்த தேசீ யக்கவி
நாமக் கல்லுறை நற்கவி யவர்கள்
சாந்தி சாந்தி சாந்தியென் றூதி
சோர்ந்த புவிக்குச் சுகமெடுத் தோதி
மாந்தரை விலங்குசெய் போரது மறைந்திட
அன்பும் அறிவும் அருளும் நிறைந்திட
இன்பமும் வளமும் எங்கும் செழித்திட
" தூங்கும் தமிழா ! துயில்விட் டெழுந்திடு
ஏங்கும் தமிழா ! எழுந்து சிரித்திடு !
சோம்பும் தமிழா ! துயர்விடு " என்று
ஊதிடு கின்றூர். ஒலிக்குது சங்கு.
சுதந்திர உணர்வைத் தூண்டும் சங்கொலி
அடிமை அபசுரம் அழிக்கும் சங்கொலி
கடமை இதுவெனக் காட்டும் சங்கொலி
இங்கிதம் செய்யும் மங்கலச் சங்கொலி
சங்கொலி ! சங்கொலி !! எங்கணும் சங்கொலி !!!
சங்கொலி தந்தோம். தமிழகம் ஏற்கவே !

வந்தனம்,

தமிழ்ப் பண்ணையாளர்கள்.

தமிழ் நாட்டில் நாமக்கல் கவிஞரின் பேர் மூலை முடுக்குகளிலும் பரவியிருக்கிறது. பண்டிதர், பாமரர் யாவரும் அவரைப்பாராட்டுகின்றனர். அவர் பேருள்ள எந்த நூலும் எளிதில் ஏற்றுக்கொள்ளப் படும்.

இதற்கு ஒரு சான்று, அவருடைய நொண்டிச் சிந்துக் சென்று மட்டும் 'ஆனந்த விகடன்' மற்றவாரங்களைக் காட்டிலும் 5000 பிரதிகள் அதிகமாக விற்றதாகத் தெரியவருகிறது.

**திரு. வி. க.**

*11-1-34ல் எழுதிய கடிதத்திலிருந்து எடுக்கப்பட்டது.*

அன்பு நிறைந்த தொண்டிலும், பல கலைகளிலும், புதிய நூல்களிலும் தன் நன் மக்கள் வாயிலாக நம தருமைத் தாய் விளங்கி வருகிருள். தமிழ்த்தாய் பெற்ற நன் மக்களுள் ஒருவராகிய இராமலிங்கம் பிள்ளையின் தேச பக்தியை நான் நன்கு அறிவேன். இராமலிங்கம் பிள்ளையின் பாடல்கள் சிற்சில அம்சங்களில் தேசியக் கவிச் சக்ரவர்த்தி ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியாருடைய பாடல்களைக் காட்டிலும் சிறந்து விளங்குகின்றன.

**ராஜாஜீ.**

*1934ல் எழுதிய முகவுரையிலிருந்து எடுக்கப்பட்டது.*

---

நண்பர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்கள் தமிழ் நாட்டின் இதயத்தைக் கவர்ந்தவர்களில் ஒருவர்.

தமிழர்கள் கூடிய கூட்டம் எதுவாக இருந்தாலும் அவர்களுடைய பாடல்களைப் பாடினுல் உணர்ச்சியும் ஆவேசமும் இதயத்தைத் தாக்காமலிராது. இது நாம் கண்கூடாகப் பார்த்த காரியம்.

**டி. கே. சி.**

# சங்கோலிக் கவிதைகள்

பக்கம்

நாரத கீதமென்ன
நயந்திகழ் பாடலாலே
பாரத நாட்டையென்றும்
பணிந்திடும் சுப்ரமண்ய
பாரதி பாட்டைக் கண்ட
பழையஇத் தமிழர்நாட்டில்
"யாரது?" என்று கேட்க
யானுமிக் கவிகள் சொன்னேன்.

நாமக்கல் கவிஞர்.

# திக்குத் தெரியவில்லை

‘ திக்குத் தெரிய வில்லை—என்ன
தீவினை செய்தேனோ !
மக்கள் படுந்துயரை—சற்றும்
மாற்ற வகையறியேன் ’.

‘ கூவும் கருங்குயிலே !—ஒரு
குறி சொல்ல மாட்டாயா ?
தேவன் அருள் வருமா ?—சுற்றும்
தீமைகள் தீர்ந்திடவே.

‘ பாடும் பசுங்கிளியே !—எந்தன்
ஜாதகம் பார்த்துச் சொல்லு
நாடும் சுதந்திரத்தை—எந்த
நாளில் அடைந்திடுவேன் ?

‘ செய்கை சுறுசுறுப்பாம்—சிறு
சிட்டுக் குருவிகளே !
வைவதை விட்டு விட்டு—ஒரு
வாழ்த்துரை சொல்லீரோ ?’

‘ காதலை இன்னதென்று—செய்து
காட்டும் புறுமணியே !
வேதனைப் புல்லடிமை—விட்டு
விடுதலை விடிவதெப்போ ?

'கூடும் கட்டத் தெரியீர்—ஆனால்
கொஞ்சுங் குரங்குகளே !
நீடும் அறிவிருந்தும்—உங்கள்
நிம்மதி பெற்றிலன் நான்.'

'ஆடும் களிமயிலே !—ஒரு
ஆருடம் சொல்லுவையோ ?
தேடும் உரிமைகளை—இந்த
தேசம் அடைந்திடுமா ?'

'காகம் வழிவிடுமா ?—நல்ல
கருடன் வலம் வருமா ?
நாகம் சகுன முண்டா ?—ஒரு
நரியேனும் முன் வருமா ?'

'என்று மனந்தளர்ந்தே—நான்
ஏங்கித் தவித்து நின்றேன்
வென்றிதருந் துணைபோல்—ஒரு
விண்ணொலி பெண் குரலாய் :

'ஞானக் குலத்தில் வந்தாய்—பல
நற்றவம் உற்றவன் நீ
ஏன் உனக் கிந்த மதி ?—விட்டு
எழுந்திரு என் மகனே !'

'வெள்ளைத் திரை மேலே—படம்
வீசும் நிழல் போல
துள்ளிய துன்பமெல்லாம்—கணம்
தோன்றி மறைவதன்றோ ?'

'இன்னும் துயர் வரினும்—உந்தன்
இளமுறை மாருதே
சின்னத் தனங்களிலே—என்றும்
சிக்கிக் கொள் ளாதே நீ!'

'ஹிம்சை புரிந்தவர்கள்—அந்த
ஹிம் சையினுல் அழிவார்
வம்ச குணம் உனதாம்—சாந்த
வாய்மை மறக்காதே'

'சண்டைகள் விட்டொழியும்—பல
சச்சரவும் போகும்
அண்டி உனே வணங்கி—பலர்
அமைதி அறிந்திடுவார்.

அந்தக் குரல் அறிந்தேன்—அது
அன்னையின் பொன் மொழிதான்
சிந்தை தெளிந்து விட்டேன்—தெய்வ
சிந்தனே செய்திருப் பேன்.

# சங்கொலி

சங்கொலி எழுந்தது
சங்கட மழிந்தது
தைரியம் கொள்வாய் தமிழ் மகனே !

கங்குலும் கழிந்திடும்
கதிரொளி பொழிந்திடும்
கவலை யெலாம் விடு தமிழ் மகனே !

கூரிருள் மறைந்திடும்
குளிர்வது குறைந்திடும்
குறுகிப் படுத்திருத்தல் இனி வேண்டாம்.

பேரருள் சுரந்திடும்
பெருவழி திறந்திடும்
பேதமை விடுவாய் தமிழ் மகனே !

திருட்டுகள் ஒடுங்கிடும்
தீயன நடுங்கிடும்
தீனர்க் கபயக்குரல் சங்கோசை

இருட்டினிற் செய்திடும்
யாவையும் மறைந்திடும்
எழுந்து கடன் முடிப்பாய் தமிழ் மகனே !

சூதரும் குடியரும்
சுருக்கெனப் பயப்படும்
சுதந்திரச் சங்கொலி கேட்குதடா

வேதமும் கலைகளும்
வித்தைகள் விளங்கிட
விடிந்திடும் சஞ்சலம் விட்டிடுவாய் !

மங்களச் சங்கொலி
மகிழ்தரக் கேட்குது
மயக்கம் விட்டெழுந்தினி மறைபாடு

எங்கணும் யாவினும்
இருந்தருள் கடவுளும்
இருக்குது பயமில்லை எழுந்திரடா !

# இணையிலாக் கொடியே!

இந்திய நாட்டின் இணையிலாக் கொடியே!
இயங்குவாய் என்றும் வயங்கொளி பரப்பி
தந்திரம் மோசம் தன்னலம் கருதா
சத்தியம் நிறைந்த உத்தம வாழ்வின்
எந்திரப் பேயின் இறுமாப் பழித்து
ஏழ்மையும் தாழ்மையும் இல்லா தொழித்து
சந்திர சூரியர் வந்துபோம் வரையிலும்
தன்னர சாட்சியின் சின்னமாய் நிற்பாய்.

பாரத நாட்டின் பகையிலாக் கொடியே!
பன்னலம் மிகுந்த உன்னுடை நிழலில்
ஊரெலாம் செழித்து உயிரெலாம் களித்து
யாரொடும் எவரும் அன்பே அறமென
பாரிடைக் கடவுள் படைத்தன பொருள்கள்
பங்கிடமூளும் பகைத்திறம் குன்றி
நேரிய வாழ்வில் நியாயம் நிலவிடும்
நீதிசேர் அரசின் ஜோதியாய் நிற்பாய்.

ஆரிய நாட்டின் அரசியற்கொடியே!
ஐம்புலன் வென்று செம்பொருள் கண்ட
வீரியஞான வித்தகர் தங்கி
வேதம் வளர்த்த இமயமலையின்
ஊரிய மனிதன் உயிருடன் காணு
உன்னத சிகரத் துச்சியில் நின்று
பாருள் யாரும் பணிந்திடுமாறு
பற்பல ஊழி பிறந்திடுவாயே.

# கொடியைப் போற்றிக்கும்பிடு

பல்லவி

கொடியைப் போற்றிக் கும்பிடு
கொடுமை தீரும் நம்பு நீ

சரணம்

அச்சம் போக்கும் கொடி இது
ஆண்மை நல்கும் கொடி இது
இச்செகத்து வாழ்வினை
இன்பமாக்கும் கொடி இது [கொடி]

பரத நாட்டின் கொடி இது
பழமையான கொடி இது
விரதமாகப் போற்றினால்
விருப்பம் யாவும் சித்தியாம் [கொடி]

சத்தியத்தின் கொடி இது
சக்தி தந்த கொடி இது
புத்தி மிக்க ஞானிகள்
பூஜை செய்த கொடி இது [கொடி]

மரணமென்ற எண்ணமே
மனதிலின்றிச் செய்திடும்
திரணமாக எதையுமே
தியாகம் செய்யத் தந்திடும் [கொடி]

கட்டுவிட்ட மக்களை
அன்புகொண்டு கட்டியே
ஒற்றுமைப் படுத்தவே
உறுதியான கொடி இது [கொடி]

ஜாதி பேதத் தீமையைச்
சாம்பலாக்கும் கொடி இது
நீதியான எதையுமே
நின்று காக்கும் கொடி இது [கொடி]

ஊழி தோறும் புதியதாம்
உறுதிகொண்ட கொடி இது
வாழி வாழி நம் கொடி
வாழ்க வாழ்க நாடெலாம் [கொடி]

# மன்னவன் நானே

மன்னவன் நானே மந்திரி என்சொல்
மற்றவர் யாருக்குச் சுற்றமிது?
என்னுடை நாடு என்னுடை வீடு
யாரிதில் என்னை மிரட்டுவது!
அன்னியர் இங்கே உள்ளவர்யாரும்
அண்டிப்பிழைத்திட வந்தவரே
என்னுடைஏவல் சொன்னதைச்செய்தோர்
என்னை அடக்குதல் இன்னுமுண்டோ

என்னுடைக்காடு என்னுடைப்பாடு
எந்தன் வெள்ளாமையை யார் அறுக்க?
மன்னவன் நானே மந்திரி என் ஆள்
மற்றவர் யாரிதை ஒத்துக்கொள்ள!
சொன்னதைச் செய்து பண்ணையைக் காக்க
சோற்றுக்கு வந்தவர் மாற்றியதேன்
இன்னமும் இந்தச் சின்னத்தனத்தில்
ஏங்கிக்கிடந்திடத் தூங்குவனோ!

என்னுடைப்பெட்டி என்னுடைத்துட்டு
யாரிடம் சாவி இருத்தல் சரி?
பொன்னையும் வெள்ளிச் செம்பு என்றாலும்
பூட்டவும் நீட்டவும் என்பொறுப்பு
சின்னப்பயலோ நான் சித்தம்கெட்டேனோ
சீச்சீ! ஏன்இந்த ஏச்செனக்கு
மன்னவன் நானே மந்திரிவைப்பேன்
மற்றவர்யாருடை சித்தம் அது?

மந்திரி நானே மன்னவன் ஆவேன்
மற்றுவர் யாருக்குக் குற்றம் இதில்?
இந்திய நாட்டில் நொந்தவரின்றி
இன்னரசாக்குவேன் என்னரசை
அந்தமிலாதான் ஆண்டவன் தந்தான்
ஆரியநாடெந்தன் ஆட்சியன்றோ!
சிந்திய செல்வம் சேகரம் செய்து
சீக்கிரம் பாக்கியம் ஆக்கிவைப்பேன்.

# என்ன உறக்கமடா?

[இராகம்—வராளி.] [தாளம்—ரூபகம்.]

## பல்லவி

என்ன உறக்கமடா உனக்கென்ன மயக்கமடா

## அனுபல்லவி

அன்னைபடுந்துயர் இன்னுமறிந்திலை
பின்னை அவளுன்னைப் பெற்றுப் பலனென்ன (என்ன)

## சரணங்கள்

கட்டத்துணியுமின்றி உண்ணக் கஞ்சியுணவுமின்றி
நெட்டும்கிழவயதில் அவள் நெஞ்சம்மிகவும்குன்றி
பெற்றவயிறவள் பற்றியெரிந்திட
முற்றுந்துயரவள் உற்றசமயத்தில் (என்ன)

கண்ணைத்திறந்துமுன்னால் இப்போ என்னநடக்குதுபார்
உன்னைப்பரிந்துபெற்றாள் ஒரு பெண்ணைப்பிறர்நகைக்க
ஓவென்றலறியே மேவியவளுன்னை
ஆவிதுடித்திடக் கூவியழைக்கையில் (என்ன)

# சண்டமாருதம்

சண்ட மாருதம் வருகு தடா
சமரச உணர்ச்சிகள் பெருகு தடா
கண்டு மாநிலம் கலங்கிடினும்
கற்றவர் உள்ளம் துலங்கிடுமே

பேரைக் கேட்டால் பயமாகும்
பெறுகிற நன்மைகள் நயமாகும்
ஊரைக் கேட்டால் தெரியாது
உள்ளம் சொல்லும் சரியாக

காற்ருெடு மழையும் இடியிடிக்கும்
கடும்போர் நடந்திடும் வெடி வெடிக்கும்
மாற்றிடும உலகின் வாழ்வுகளை
மறைத்திடும் ஏற்றத் தாழ்வுகளை

பள்ளமும் மேடும் சமனுகும்
பாபங்களுக்கது எமனுகும்
கள்ளமும் சூழ்ச்சியும் கரைந்தோடும்
கருணையின் வெள்ளம் நிறைந்தோடும்

கலைகளும் கவிதையும் புதுமை பெறும்
கஷ்டமும் சுகங்களும் பொதுமையுறும்
நிலமிசை நீதியை நிலைநாட்டும்
நெறிமுறை புதுப்புல்தலைநீட்டும்

சரித்திர வெள்ளித் திரைமேலே
சமுத்திர அலைகள் திரள் போல
விரித்திடும் புதுப்புதுக் காட்சிகளை
விளக்கிடும் இயற்கையின் ஆட்சியினை

மலைகளும் மரங்களும் சாய்ந்து விடும்
மனிதருள் பிணக்குகள் ஓய்ந்துவிடும்
தலைவிரித்தாடிய அகந்தை யெல்லாம்
தரையொடு மண்ணில் புகுந்தொழியும்

சக்திக் கடவுளின் பெருமூச்சே
சண்ட மாருதம் எனலாச்சு
பக்திக்குரியவர் அஞ்சாரே
பாதகர் யாரும் மிஞ்சாரே.

# புதுவழி

எத்திசையில் எம்மொழியில் எவர்வாய்ச்சொல்லில்
எப்படியாய் வரும்கதைகள் எதுவானாலும்,
சத்தியத்தின் வழிகாட்டும் அறிவையெல்லாம்
தமதாக்கிக் கலைவளர்த்த தமிழர்நாட்டில்,
இத்தினத்தே கூடியுள்ளோம் இனிதே எண்ணி
இந்தியத்தாய் சுதந்திரத்தை எய்தும் மார்க்கம்
நித்தியமாம் அறங்களையே நினைவில்வைத்து
நிந்தையில்லாச் செயல்முறைகள் நிறுவவேண்டும்.

மன்னவரைச் சதிபுரிந்து வெட்டிமாய்த்தும்,
மாறுபட்ட கருத்துடைய வார்த்தையொன்றைச்
சொன்னவரைச் சுட்டெறிந்தும், துன்மார்க்கத்தால்
அயல்நாட்டைப் படையெடுத்துத் துன்பம்செய்தும்,
இன்னபல கொடுமைசெய்யும் பிறநாட்டாரை
இந்நாட்டின் விடுதலைக்குப் பின்பற்றுமல்
முன்னையநம் நாகரிகம் முறண்படாமல்
முடிவுசெய்வீர் சுதந்திரப்போர் முறைகளெல்லாம்.

அடிமைகொள்ளும் நம்விலங்கை அகற்றவேண்டும்,
அதையும் உயர் அன்பின்வழி அகற்றவேண்டும்.
கொடுமைசெயும் வழக்கமெல்லாம் கொளுத்தவேண்டும்,
ஒருவருக்கும் கொடுமையின்றிக் கொளுத்தவேண்டும்.
முடியுமெனில் அப்படியே முடிப்போம், இன்றேல்
முயற்சியொடு நாமெல்லாம் முடிவோம் என்னும்
திடமதுதான் தீரமொடு வீரமாகும்.
தெரிந்துரைகள் அதற்குதவச் செப்புவீரே.

ஒருஊரில் ஒருஜாதி ஒருமதத்தார்
ஒன்ருகச் சேர்ந்திருந்தார் உறவாய் என்னும்
மருவாத பழங்கால நிலைமையெல்லாம்
மலையேறிப் போனதுகாண், மண்மேல் இன்று
ஒருநாட்டில் பலமதங்கள் பலநாட்டாரும்
ஒன்ருகச் சேர்ந்திருக்கும் உறவேவேண்டும்.
பெரும்நீதி இதைமனதில் பிசகிடாமல்
பேசிடுவோம் விடுதலையின் பேச்சையெல்லாம்.

வள்ளுவரின் வாழ்க்கைதனை நினைப்புமூட்டி
வான்புகழும் திருக்குறளை நடந்துகாட்டும்
கள்ளமிலாக் காந்திமுனி காட்டித்தந்த
கருணையொடு சத்தியத்தின் வீரம்சேர்ந்த
தெள்ளியநல் புதுவழியே உலகுக்கின்று
தேவையென்று தெளிந்தவர்கள் செப்புகின்ருர்
தள்ளரிய அப்பெரிய தவத்தைத்தாங்க
தமிழர்கள்நாம் மிகமிகவும் தகுதி ஆவோம்.

# உண்மை

(காம்போதி—ரூபகம்)

பல்லவி

உண்மை வளர்ந்திடாமல் ஒழுக்கம் உயர்ந்திடாமல்
உண்டோ சுதந்திரமே. (உண்மை)

அநுபல்லவி

பெண்மை நிறைந்தவெறும்—பேதைகள் பக்தியென்ற
பேச்சுக்கோ அளவில்லை சிச்சி இதென்ன தொல்லை.
(உண்மை)

சரணம்

ஏழைகளை வருத்தும் எண்ணம் குறையவில்லை.
ஏமாற்றி வாழ்ந்திடும் இச்சை மறையவில்லை.
கூழுக்கு ஆசைகொண்டால் மீசைக்கும் நேசமுண்டோ
குளிர்ச்சியும் வெப்பமும் கூடியிருப்பதுண்டோ (உண்மை)

அதிகாரம் செலுத்திடும் ஆசை மிகவுமுண்டு
அதனாலே பணம்சேர்க்கும் ஆத்திரமேகொண்டு
எரிகின்ற வீட்டிலே எடுத்தது லாபமென்னும்
எண்ண முடையவர்க்கு நண்ணுமோ சுதந்திரம்
(உண்மை)

எப்படி வாழ்ந்தாலும் ஒப்பிட நாடுண்டு
ஏனென்று கேட்டிட நானென்று யாருண்டு
கைப்பிடி பிடித்தாலும் காத்திடும் தந்திரம்
கள்ளம் நிறைந்த இங்கே செல்லுமோ சுதந்திரம்
(உண்மை)

நாவினிற் சுதந்திரம் நாட்டம் பணத்தில் குறி
நல்லதோ பொல்லாதோ வந்தவரையில் சரி
பாவ புண்ணியமெல்லாம் பண்டைக்காலத்துப் பேச்சு
பாதகம் குறையாமல் பாவனை எதற்காச்சு (உண்மை)

சாத்திரம் வேதமெல்லாம் நாத்திறத் தாடுது
சாமிகள் கோவிலிலே தாமங்கே வாடுது
மாத்திரை அளவேனும் மனதில் நினைவில்லார்க்கு
மங்களசுதந்திரம் எங்கே வருமவர்க்கு (உண்மை)

# சத்தியம் மறந்தனே

(முகாரி ராகம்—ரூபகதாளம்)

பல்லவி

சத்தியம் மறந்தனே சாந்தம் குறைந்தனே
சத்யாக்ரஹம் விட்டு மனமே (சத்திய)

அநுபல்லவி

உத்தமவழியினை உலகினுக்குணர்த்திட
உன்னையன்றோ நம்பியிருந்தேன் (சத்திய)

சரணம்

உடல் பொருள் ஆவியும் உண்மைக்கு தத்தம் என்று
ஓயாமல் உரைத்தனே மனமே!
கடல்பெரும் பயன்வந்து கைகூடும் சமயத்தில்
கைவிட நினைத்தனே மனமே! (சத்திய)

அதிகார அகந்தையை அகற்றிடவேண்டுமென்று
அதற்கென்றே முன்வந்தாய் மனமே!
சதிகாரருடன் சேர்ந்து அதிகார வெறிகொண்டு
சங்கல்பம் மறந்தனே மனமே! (சத்திய)

'அன்பின் வழிநடந்து அறங்கள் நிலைநிறுத்த
அர்ப்பணம் நான் என்றாய் மனமே!
துன்பம் மிகக்கொடுக்கும் ஆசைகள் தூண்டிட
தூய்மையிற் குறைந்தனே மனமே! (சத்திய)

'என்ன எவர் செய்தாலும் ஹிம்சைசெய்யேன்' என்று
என்னைச் சபதம் கொள்ளச்செய்தாய்
சின்னஞ் சிறிதுக்கெல்லாம் சித்ரவதை புரிந்தென்
சிந்தனையைக் கெடுத்தாய் மனமே! (சத்திய)

'காந்திக்கு ஜேஅவர் கண்கண்ட தெய்வ' மென்று
காட்டினதெனக்கு நீ யன்றோ
சாந்திக்கு நேர்வரும் தரிசன சமயத்தில்
சதிசெய்யத் துணிவது நன்றோ (சத்திய)

தஞ்சம் உனையேநம்பி சத்யாக்ரஹம் புரிய
தைரியம் நான்கொண்டேன் மனமே!
கொஞ்சம் தயவுசெய்து குறைதூரம் துணைவந்தால்
கோரிய பலன்களைப் பெறுவோம் (சத்திய)

# தீர்க்க தரிசி

### பல்லவி

தீர்க்க தரிசிசொன்ன மார்க்க மதனைவிட்டு
திரும்புவதென்ன மனமே (தீர்க்க)

### அநுபல்லவி

பார்க்குள் பெரியவர்கள் பார்த்த அனுபவத்தை
காக்கும்படி யுதித்த காந்தியெனும் பெரிய (தீர்க்க)

### சரணம்

ஆண்மை மறந்தவர்க்கு ஆளும் திறமையுண்டோ
அன்பைத் துறந்தவர்க்கு இன்ப நிலையுமுண்டோ
பான்மை அறிந்திருந்தும் மேன்மை வழியைவிட்டு
பற்பல எண்ணி எண்ணி அற்பத்தனத்திற்பட்டு (தீர்க்க)

அன்பிற்குயிர் விடுதல் ஆண்மையதுவே யாகும்
ஆசை அதிகப்பட்டால் ஆளும் திறமைபோகும்
துன்பம் சகித்துப்பெற்ற தூய்மை மிகுந்திடும்
துறவி உனக்குச்சொன்ன அறவுரை இகழ்ந்தனை (தீர்க்க)

உண்மை யுறுதியின்றி உண்டோ சுதந்திரம்
உயர்ந்த ஒழுக்கமின்றி வேறுள்ள தந்திரம்
என்னென்ன செய்திடினும் ஏதும் பலித்திடுமோ
என்னும் பொய்யா மொழியைச்சொன்ன பெருந்தவசி
(தீர்க்க)

# புத்தாண்டு

[வேலூர் சிறையில் கவிஞர் ஆங்கிரஸ
வருஷப்பிறப்பன்று பாடியது.]

எண்ணிலா ஆண்டுகண் டிங்
 கிருந்தவளெனினுமின்னுங்
கண்ணினுக் கினியதூய
 கன்னியாயென்றும் நின்று
தண்ணொளியழகு காட்டும்
 தமிழகத்தாயே இன்றுன்
புண்ணியம்நிறைந்த வாழ்வில்
 புதியதோர் ஆண்டு பூண்டாய்.

காங்கிரஸ் காரர்யாரும்
 காந்தியெம் அடிகளாதி
ஆங்கிலர் சிறையிற்றள்ள
 அருந்த வங்கிடக்குமிந்நாள்
ஆங்கி இரசமென்றேதும்
 ஆண்டினைப் பூண்டுவந்தாய்
பாங்கியே இந்தக் கோலம்
 பார்த்திலம்முன்னம் நாங்கள்.

புதிய இவ்வாண்டில் மிக்கப்
புதியதோர் அழகுபூண்டாய்
நிதியமும் இழந்ததெல்லாம்
நீயடைந்திட்டாய்போல
விதியினைக்கடந்தஞான
வித்தகர் தெளிவுபூண்டாய்
புதியது புதியதம்மா
புகுந்த உன்கோலம் இன்று.

வாடினை யிருந்தமேனி
வளமிகும் வடிவுகாட்டிக்
கூடின புருவம் இன்று
குளிர்ந்தன களிக்கக்கண்டோம்
பாடினை இனியகீதம்
பற்பல ஆண்டுக்கிப்பால்
ஆடினை அடையாளத்தை
அறிந்திலம் முதலில்நாங்கள்

முன்னம் நீ எம்பாற் கொண்ட
முனுமுனுப்பின்று காணேம்
அன்னை நீ முன்னம் காட்டும்
அருவருப்பின்று காணேம்
பின்னும் நீ எம்பாற்பேசும்
பிணக்கினைக் காணேமின்று
என்னமோ புதுமையாக
இருக்கிறதெங்கள் தாயே.

விட்டினிலிருந்த போது
வெருண்டெமை மருண்டுபார்ப்பாய்
கூட்டினிற் கிடக்குமிந்நாள்
குளிர்ந்தனைச் சிரித்துவந்தாய்
நீட்டினை முடங்கிநொந்த
நின்னுடை அங்கம் பூத்துக்
காட்டினை என்றுங் காணு
கட்டமுகுடனே வந்தாய்.

என்னையும் மறந்தஉந்தன்
இருண்டிடை சுருண்டகூந்தல்
வண்ணமாய் வாரிமிக்க
வாசனை மலருஞ்சூடி
திண்ணமாய் சக்திக்கானத்
திலகமும் தீட்டியுந்தன்
கண்ணியல் மையினோடு
கலவையின் மையுந்தீட்டி.

பற்பல ஆண்டின் முன்னே
வெறுத்தஉன் பணிகளெல்லாம்
அற்புத உந்தன்மேனி
அழகுற அணிந்தாயின்று
கற்பனைக்கடந்த வேலை
கதிர்விரியுடையும் பூண்டாய்
நிற்பதுகண்டோம் என்ன
நினைந்திவை புனைந்தம்மா?

புத்தொளி புனைந்துளஎம்முன்
புத்துயிரளிக்கவந்தாய்
இத்தினம் உந்தன் ஆண்டு
விழாவினில் எங்கள் தாயே
பத்தியுன் பாதம்போற்றிப்
பணிந்துனை வேண்டுகின்றோம்
உத்தமீ எங்கட்கின்று
ஒருவரம் தருதல்வேண்டும்.

அடிமையின் வாழ்வுநீங்க
ஆண்மையும் அறிவும்வந்து
குடிமையின் முறையும் சொந்தக்
கோல் நெறியரசும் கொண்டு
படிமிசை எவர்க்கும் அஞ்சிப்
பணிந்திடாப் பலமும்பற்றி
விடுதலை யடையத்தேசம்
வழிவிடவேண்டும்தாயே.

சோறிலை யென்பாரின்றித்
துணியிலையென்றும் உண்ணும்
நீரிலையென்றும் நிற்க
நிழலிலையென்றும் சுற்றத்
தாரிலையென்பா ரோடுந்
தாழ்ந்தவரென் பாரின்றி
பாரினில் எவர்க்கும் நாங்கள்
பகையிலை என்றவாழ்வில்

ஏழையென் றெவருமின்றி
எளியரென்பாரு மின்றி
கோழை யென்றுரைக்க ஆண்மைக்
குறைந்தவர் ஒருவரின்றி
மேழியும் தொழிலும்தந்த
மேதினிப் பொருள்கள்யாவும்
வாழிய எவர்க்கும் கிட்டி
வருந்துவா ரெவருமின்றி

எண்ணெழுத் திரண்டுங்கல்லார்
இல்லையின்னுட்டி லென்னப்
பெண்ணுெடு ஆணும்ஒத்துப்
பிணக்கிலா தம் தம்வாழ்வை
எண்ணிய இறைவனுணைக்
கிடரிலா ஒழுங்கில் ஏந்தும்
புண்ணிய வாழ்விற்காசி
புரிந்திடல் வேண்டுந்தாயே.

என்னுடை நாடிந்நாடு
என்றிதிற் பிறந்தயாரும்
தன்னுடை யறத்தைச்
செய்யத் தடுப்பவர்யாருமின்றி
'மன்னவன் நானே' என்று
மனங்களித் தினிதுவாழ
இன்னவை வரமேவேண்டி
இணையடி பணிந்தோம் தாயே.

## தாய் வரங்கொடுத்தல்

தந்தனனிவ்வரம்
தந்தனனிவ்வரம்
தந்தனன் என்மகனே
வந்ததுவாழ்வினி
வெந்தது தீவினை
வாழ்ந்தனை உன்செயலால்

நாட்டையிவ் வடிமையின்
மீட்டிடுவே னென்று
நாட்டினை தவக்கொடியே
கேட்டு மகிழ்ந்துனைப்
பார்த்துப் புகழ்ந்திடக்
கிட்டினனிங்கு வந்தேன்

தருமமுணர்ந்தனைக்
கரும மறிந்தனைத்
தாயென நீ நினைத்தாய்
பெருமை யளித்தனைச்
சிறுமை யொழித்தனை
பெற்ற மனங்களித்தேன்

அச்ச மகற்றினை
ஆண்மை பெருக்கினை
ஆநந்தம் பொங்குதடா
இச்சையதன் படி
யாவு முனக்கினி
இல்லறம் தங்குமடா

தீயவை விட்டனை
தூயவை தொட்டனை
தெளிவடைந்தாய் மகனே
போயின என்னுடை
மனக்குறை யாவையும்
புத்தொளி பூண்டு விட்டேன்

உன்னை யுணர்ந்தனை
என்னை யுவந்தனை
உண்மை யறிந்துவிட்டாய்
இன்று மெனக்கினி
என்ன மனக்குறை
இன்னல் மறந்துவிட்டேன்

என்னுடை நாடெனச்
சொன்ன உன்சொற்களில்
என் மனங் குளிர்ந்ததடா
பின்னிய துயர்விட
பொன்னொளி யணிமணி
பூண்டு மகிழ்ந்ததடா

சத்திய முன்னுடைச்
சித்த முதித்தது,
சஞ்சலம் ஏன்மகனே ?
பொய்த்தவர் வஞ்சமும்
புகுந்தவர் மோசமும்
போவது காண்மகனே

சாந்தி பிறந்துயர்
காந்தி விரிக்குது
சங்கடம் தீர்ந்ததடா
போந்தது புத்துயிர்
புகுந்தது தைரியம்
புதுவருஷத் தோடே

திங்கள் மும்மாரியிற்
பொங்கிடும் பாலினி
தேசம் செழிக்குமடா
மங்களம் மங்களம்
மங்கள முனக்கினி
மகனே எழுந்திரடா.

# நல்ல வழி

(இராகம் : ஆனந்தபைரவி—தாளம் : ரூபகம்)

### பல்லவி

நல்ல வழியிருக்க அல்லல் வழிநினைத்து
நாளும் அலைந்தாய் நெஞ்சமே (நல்ல)

### அநுபல்லவி

தொல்லைமுனிவரர்கள் சொல்லியவழியது
சுதந்திரநாட்டிற்குச் செல்லுதற்கெளியது (நல்ல)

### சரணங்கள்

கடியும்புலிகரடி கொடியமிருகமில்லை
கள்வர்கள் பயமில்லை பள்ளம்மேடுள்ளதல்ல
குடியுங்கொலைகளவும் அடியும்வழிபறியும்
கொஞ்சமும் அதிலில்லை நெஞ்சமே நீசெல்ல (நல்ல)

கோபமென்னும் வெயிலின் தாபமங்கடிக்காது
குரோதமெனும்பனியின் குளிர்வந்துநடுக்காது
சாபம்பிறர்க்குச்சொல்லும் தாகமும் எடுக்காது
சங்கடப்பேய்கள்நம்மை அங்கேதும் தடுக்காது (நல்ல)

நாடும்மதங்களெல்லாம் கூடும்அவ்வழிசென்று
நாலிருவழிகட்கும் நடுவானததுவொன்று
பாடும்மறைகளெல்லாம் தேடும்அதனையென்றும்
பக்தியுடையவர்க்குப் பாதைமிகவும்நன்று (நல்ல)

ஆய்ந்தபெரியவர்கள் தேர்ந்தது அவ்வழி
ஆனந்தசுதந்திரம் போனவர்க்கங்குவெளி
காந்திமுனிவன்சொல்லும் சாந்தமென்றொருமொழி
காட்டியவழிசென்றால் விட்டையடைவாய்தெளி (நல்ல)

# விரும்பிய நாடு

மன்னவன் என்ற மனிதனில்லை—அங்கே
மந்திரி தந்திரி யாருமில்லை
சின்னவர் என்று எவருமில்லை—பட்டம்
தேடிய லைந்திடும் மக்களில்லை.

ஊருக்குப் பத்துபேர் நல்லவர்கள்—பொது
யோசனை செய் திடவல்லவர்கள்
யாருக்கும்எதிலும் ஓரங்கள்—செய்யாமல்
அப்பப்போ தீர்ப்புகள் செப்பிடுவர்.

நல்லவர் கெட்டவர் என்ப தெல்லாம்—அங்கே
ராஜாங்கபட்டம் பதவியல்ல
சொல்லில் நடத்தையில் சூரத்தில் தீரத்தில்
சுத்த ரென்று பலர் நத்துவதே.

கச்சேரி என்றொரு கட்டிடமும்—அதைக்
கண்டு நடுங்குதல் அங்கில்லையே
அச்சமில்லாமலே யாரும்பொறுப்புடன்
அங்கங்கே நீதி நடத்திடுவார்.

வீதிக்கு வீதியோர் நீதிஸ்தலம்—பத்து
வீட்டுக்கு அங்கொருபள்ளிக்கூடம்
நீதிக்கு ஓடியலைந்து செலவிட்டு
நிலைகெட்டுப்போகிற நிந்தையில்லை.

பள்ளிப்படிப்புக்குச் சம்பளம்—இன்னும்
பரிட்சைக்குக் கட்டபண மெனவும்
பிள்ளைகள் பந்தாடப்பின்னும் பணமென்று
பிச்சுப்பிடுங்குதல் அங்கில்லையே.

வேலையில்லாதவர் யாருமில்லை—முற்றும்
வினருக்கங்கே வேலையில்லை.
கூலியில் லாதவர் யாருமில்லை—சும்மா
கும்பிட்டுத் தின்கின்ற கும்பலில்லை.

கூனும் குருடரும் மொண்டி முடங்களும்
கொஞ்சம் : அவருக்கும் பஞ்சமில்லை
தானங் கொடுப்பதென்றில்லாமல்—பொது
தர்மமென்றே வைத்துத் தாங்கிடுவார்.

ஒப்பிமனங்களித் தெல்லாரும்—அங்கே
உண்டு உடுத்துக் களித்திடுவார்
தப்பிதம்செய்திடத் தோன்ருது—அதன்
தண்டனை தந்திடவேண்டாது.

வாது வழக்குக்கு நேரமில்லை—அங்கே
வஞ்சித்து வாழ முடியாது
சூதுசெய் பந்தயம் ஏதுமில்லை—முற்றும்
சோம்பிச்சுகிக்க வழியுமில்லை.

கள்ளைக் குடிப்பது கூடாது—அங்கே
காமக் கலகங்கள் கண்டதில்லை.
கொள்ளை யடித்திடத் தேவையில்லை—என்றும்
கொஞ்சமும் யாருக்கும் பஞ்சமில்லை.

காவிரி நீர்வற்றிப் போவதில்லை—ஒரு
கால்வாய் மேஸ்திரி எங்குமில்லை
காவலும் கட்டுகள் ஏதுக்கு எப்போதும்
கள்ளர் பயமென்ற சள்ளையில்லை.

பண்ணையக் காரர்கள் எல்லாரும்—எங்கும்
பட்டினி என்கிற சொல்லேது ?
கண்ணியம் அற்றவர் யாருமில்லை—ஒரு
காலித்தனம் பண்ண ஏலாது.

கண்டதும் கேட்டதும் எப்படிப்—போனாலும்
கச்சேரி வந்து பொய்சொன்னதுமெய்
கண்டவர் உண்மையைச் சொல்லவும் வாய்பொத்திக்
கைகட்டி நின்றிடும் கஷ்டமில்லை.

கொடுத்த பணத்தையும் வாங்குதற்கு—நித்தம்
கோரட்டு வாசலில் காத்திருந்தும்
அடுத்த பிறவிக்குப் போகுமட்டும் நொந்து
அல்லல் அடைகின்ற தொல்லையில்லை.

துக்கத்தைச் சொல்லி அழுவதற்கும்—வெகு
தூரம் நடந்து பிராது சொல்லி
பக்கத்தில் நின்றவர் ஏனென்று கேட்கவும்
பற்றற்றுப் போவதும் சற்றுமில்லை.

தீண்டப்படாதென்று சொன்னாலும்—அங்கே
தீண்டுதல் வேண்டித் திரிவதில்லை.
வேண்டிய சுகங்கள் யாவும் பிறரைப்போல்
வேணமட்டும் உண்டு வேறெதற்கு ?

சங். 3.

கோயில் குளங்களும் வேணதுண்டு—ஆனல்
கும்பிடப்போவதில் சண்டையில்லை
வாயில் ஜெபதபம் வஞ்சனை நெஞ்சத்தில்
வைத்துப் பிழைத்திடத் தேவையில்லை.

வட்டிக்குப்போடப் பணமும் இல்லை—அங்கே
வட்டிக்கு வட்டிசெய் சட்டமில்லை
பெட்டிக்குச் சாவியும் இல்லாமல்—வெறும்
பேச்சில் புரண்டிடும் நாணயங்கள்.

தானியம் தவசம் அல்லாமல்—அங்கே
தங்கமும் வெள்ளியும் செல்வமல்ல
நாணயமாற்றென்ற நாடக ஜாலங்கள்
நாகரிகப் பித்தலாட்டமில்லை.

சின்னக்குழந்தைக்குத் தாலிகட்டி—வெகு
சீக்கிரம் தாலி அறுத்தாலும்
வன்னமீ கெடுத்தவள் வாழ்வைக் குலைத்திடும்
வண்ட வழக்கங்கள் கண்டதில்லை.

நாட்டுக்குப் பகைவர் யாருமில்லை—பிறர்
நாட்டின்மேல் ஆசையில்லாததனுல்
சூட்டுக்குச்சூடும் கொடுத்திடுவார்—பகை
துஷ்டர் வந்தாலும் துரத்திடுவார்.

# வாழ்க நம்நாடு

நம்நாடு செழிக்கவேண்டும்
நாமெல்லாம் களிக்க வேண்டும்
தம்நாடு மட்டும்வாழப்
பிறர்நாட்டைத் தவிக்கச் செய்யும்
வெம்நாடு களுக்கெலாமோர்
விழுமிய ஞான மார்க்கம்
எம்நாடு உதவிற்றென்று
இந்தியன் மகிழ வேண்டும்.

கண்டவர் மகிழவேண்டும்
கேட்டவர் புகழ வேண்டும்
கொண்டவர் குலவவேண்டும்
குறைந்தவர் நிறைந்து மெச்ச
அண்டின எவரும் அச்சம்
அடிமையை அகற்று மாறு
தண்டமிழ் அலைகள்வீசி
நம்நாடு தழைக்க வேண்டும்.

இலக்கண உயர்விற்சொல்லின்
இனிமையிற்பொருளில் வாழ்வின்
விலக்குகள் விதிகள்வைக்கும்
விதத்தினில் விநயம் தன்னில்,
கலைக்கொரு தனிமைகாட்டும்
கவிதையின் கனிவில் கற்றோர்
தலைக்கொளும் தமிழைப்போற்றி
நம்நாடு புதுமை தாங்கும்.

எந்நாட் டெவர்வந் தாலும்
எம்மொழி பேசினாலும்
சொந்நாட் டவர்போலிங்கு
சுகித்துநிம் மதியாய் வாழத்
தந்நா டுலகி லிந்தத்
தமிழகம் போலொன் றுண்டோ
அந்நம் புகழைக்காத்து
நம்நாடு அன்பே ஆற்றும்.

அன்பினால் கலந்துவாழ்ந்து
'ஆரியன்' 'அயலான்' என்னும்
வம்பெலாம் வருமுன்னாலே
வள்ளலார் வளர்த்த வாய்மை
என்பெரும் தமிழாலிந்த
இருநில மக்கட் கெல்லாம்
இன்பமே தருவதாக நம்நாடு
இசைக்க வேண்டும்.

அன்னியம் அறிவிற்கில்லை
அன்பிற்கு அளவே இல்லை
என்னவே உலகில்மற்ற
எவரெவர் மொழியும் ஆய்ந்து
தன்னொடும் வாழவைத்த
தமிழ்மொழி பெருமை தாங்கி
நன்னெறி விளக்காய்நின்று
நம்நாடு நல்மே நல்கும்.

புதுப்புது அறிவைத்தேடிப்
போயலைந் துழன்று நாடி
விதப்பல விஞ்ஞானத்தை
விரித்திடும் மெஞ்ஞானத்தால்
பொதுப்படக் கலைகளெல்லாம்
தமிழிலே புதுமை பூண
மதிப்பொடு எவரும் போற்ற
நம்நாடு மணக்க வேண்டும்.

தமிழர்கள் உலகுக்கீந்த
வள்ளுவர் தாமே என்ன
அமிழ்தினும் உயர்ந்ததான
அறமெலாம் நடந்து காட்டும்
கமழ்மணம் உலகம்போற்றும்
காந்தியார் ஏந்தும் கொள்கை
நமதெனும் பெருமையோடு
நம்நாடு நன்மை பேசும்.

தாழ்வுகள் யாவும் போகத்
தரித்திரக் கொடுமை நீங்கிச்
சூழ்கடல் உலகில்மக்கள்
சுதந்தரத்துடனே வாழ்ந்து
ஆழ்கலை அறிவும் ஓங்கி
ஆண்டவன் அன்பைக் கண்டு
வாழ்ந்திட வேண்டுமென்றே
நம்நாடு வாழவேண்டும்.

# நாட்டை மறந்தனே

நாட்டை மறந்தனே மனமே
நாளுமிங் கெளியவர் வருந்தும்
பாட்டை நினைந்திலை சிறிதும்
படித்தனே யதன் பயன் இதுவோ?
பூட்டிய விலங்குடன் புலம்பும்
பெற்ற பொன்னாட்டினைப் போற்றாய்
ஏட்டிற் படித்தனே வேதம்
ஏதும்உன் செய்கையில் இல்லை!

வேதம்வே.தாந்தங்கள் வளர்ந்து
வேண்டிய வளம்முற்றும் பொருந்திப்
பூதங்கள் விபத்துக்கள் குறைந்து
பூமியில் இணையற்ற நாட்டில்,
சாதமும் வயிற்றிற்கில் லாமல்
சாகாதும் பிணமெனத் தளர்ந்தோம்.
ஏததன் காரணம் என்றே
எண்ணவும் மாட்டனே நெஞ்சே!

தன்னுயிர் போற்பிற உயிரைத்
தாங்கிய பெரியவர் வாழ்ந்து
பொன்னொளி வீசிய நாட்டின்
புகழறம் நீபிறந் தழித்தாய்
அன்னியர்க் குளவுகள் சொல்லி
அவர்தந்த எச்சிலை அருந்தி
உன்னுடன் பிறந்தவர் வருந்த
உடல்சுகித் திருந்தனே மனமே!

மாற்றவர்க் கிடங்கொடுத் தேழை
மக்களைப் பிழிந்துடல் வளர்த்தாய்
கூற்றுவன் கணக்கிடும் நாளில்
கூறுவை பதிலென்ன மனமே!
விற்றிருந் தாண்ட உன் அரசை
விற்றுடல் சோம்பினை யினிமேல்
ஆற்றுவை இப்பழி அகற்ற
அன்னையின் விடுதலைக் கறமே.

சொந்தசு தந்திரம் மறந்தாய்
சோற்றினுக் குடல்சுமந் திருந்தாய்
பந்தம கன்றிட நினையாய்
பாரதத் தாயினைப் பாடாய்
அந்த மிலாதவள் செல்வம்
அன்னியர்க் கிழந்தனைக் குடிகள்
கந்தையும் கஞ்சியும் அற்றார்
காரணம் நீயெனக் கருதாய்.

அடிமையிற் பழகினைப் பொழுதும்
ஆண்மையை மறந்தனை முழுதும்
குடிமுறை குறைந்தனைச் சிறிதும்
குலமுறை நினைந்திலைப் பெரிதும்
மிடிமையிற் கிடந்ததுன் நாடு
மேன்மையை இழந்ததுன் வீடு
மடமையில் மயங்கியிப் பிறப்பின்
மகிமையை மறந்தனை மனமே!

கொண்டவள் குலக்கொடி வாடக்
கூத்தியர் மையலிற் குறையும்
வண்டர்கள் எனவல்ல முன்னோர்
வழக்க ஒழுக்கத்தை மறந்து
கண்டவர் சிரித்திடக் களித்து
கற்றவர் மொழிகளைப் பழித்து
அண்டிய அயலவர் மயக்கால்
அழித்தனை மனையறம் அறிவோ ?

ஜாதியை மதத்தினைப் பழித்துச்
சண்டையில் உவந்தனை மனமே
வாதுகள் மிகுந்தன நாட்டில்
வறியவர் வரிகளால் வருந்த
ஏதினி விடுதலை எனவே
யாவரும் ஏங்கினர் நல்லோர்
ஓதிய ஒற்றுமைக் குழைத்து
ஒப்புற ஒழுகுவை உயர்வாய்.

தேனுள்ள தாமரைமேலே
தினமுள்ள தவளையைப் போல
நானுள்ள இப்பெரும் நாட்டின்
ஞானமெல் லாந்திறண் டாற்போல்
ஊனுள்ள தேகத்தினேடும்
உன்முன்னே காந்தியோன் றுற்றும்
ஏனென்ன என்றிலை மனமே
இருந்தென்ன போயென்ன நீயே.

ஆண்டவன் உனக்கென்ற நாட்டில்
அன்னியர்க் கரசளித் தடிமை
பூண்டுடல் வளர்த்தனை நெஞ்சே
புண்ணியம் உனக்கிலை நரகே
மீண்டுமுன் நாட்டினை மீட்க
மெய்பொருள் ஆவியும் ஈந்து
ஆண்டொழில் புரிகுவை யாயின்
ஆன்ம சுதந்திரம் அடைவாய்.

# நாட்டுக்கும்மி

## பிரம்மன் துதி.

நீதிநிலைக்க நினைந்தவனும் அருள்
ஜோதியுருக்கொண்ட மேனியனும்
ஆதியறத்தை அளித்திடுவான் எங்கள்
அரவிந்த நாதனைப்போற்றுங்கடி.

## சிவபிரான் துதி.

ஆலமுண்டாலும் அசையாதான்பர
காலனடிகுண சீலனடி
பாலைமுனிந்த பனிமொழியாள்பதி
பாலகங்காதரன் பாடுங்கடி.

## கோபாலன் துதி.

தீதுசெய்வேந்தரைச் சீர்திருத்தம் செய்யத்
தூதுநடந்திடும் தூயனடி
கோதில்குணத்தவன் கோகுலத்தில் வந்த
கோபால கிருஷ்ணனைப்பாருங்கடி.

## வழிபடு கந்தன் துதி.

கந்தமலரோரு மேலவர்க்கும் ஞானக்
கைப்பலம் காட்டிய கந்தனடி
கந்தமணக்கின்ற ஜோதியடி புகழ்
காந்தியடி வெகுசாந்தனடி.

## தற்கால நிலைமை.

கிட்டுங்கடி மலர் கொட்டுங்கடி கையைத்
தட்டுங்கடி கண்ணீர் சொட்டுங்கடி
மட்டில்புகழ் கொண்ட இந்திய தேவியின்
மாட்சிமை கெட்டதைக் கேளுங்கடி.

கெட்டோமடி குடிகெட்டோமடி நாம்
பட்டோமடி வெகு கஷ்டமடி
முட்டத்தரித்திரம் கிட்டிமுறைக்குது
மூதேவி நம்மைமுறைமை கொண்டாள்.

கஞ்சியற்றேம் பழங்கந்தையற்றேம் குல
வஞ்சியரே என்னவஞ்சமடி.
கெஞ்சிநின்றேம்மிக அஞ்சுகின்றேம் என்ன
காலமடிவந்த கோலமடி.

மானமிழந்து மதியிழந்துபுகழ்
தானமிழந்து தவமிழந்து
ஞானமிழந்து நலமிழந்து நாம்
போனகதியினைப் பாருங்கடி.

காசுபணத்தைக் கைவிட்டாலுங் கதிர்
வீசும்புகழை விடலாமோ
வீசும்புகழையும் விட்டுவிட்டோம்சற்றும்
வெட்கமுமின்றி வெளியில் வந்தோம்.

நல்லகுடியிற்பிறந் தோமடிநாம்
நல்லநிலையிலிருந் தோமடி
தொல்லைப்பிறப்பும் புகழும்மறந்துநாம்
தொண்டுசெய் தொண்டரின் தொண்ட
[ரானேம்.

பேரும்புகழும் பெருமையுங் கொண்டவர்
பேரரின்பேரரின் பேரரடி
சீரும்சிறப்பையும் விற்றுவிட்டுநாம்
சின்னத்தனத்தினே தேடிக்கொண்டோம்.

உத்தமஜாதி மனிதரடிநாம்
உத்தமமான குலத்தரடி
பத்தினிஜாதியின் பாவையரேயிப்போ
பஞ்சப்பனுதிக ளானமடி.

வேந்தர்குடிவந்த மாந்தரடிவெகு
வெற்றியடி நாம் பெற்றதடி
சோர்ந்துசுழன்று சுழித்துத்திரிகின்ருேம்
சொக்குதடிமனம் வெட்குதடி.

அன்னக்கொடிகள் பறந்துவிருந்திடும்
ஆசாரவாசலின் வீதியடி
பின்னக் கழுதையும் பேயும்குடிகொள்ளப்
பெண்மணியே என்ன காலமடி.

கோடானுகோடி குடித்தனக்காரரின்
கூட்டமடி யெங்கள் கூட்டமடி
நாடோடியாகி நடுத்தெருவில்நின்று
நாமும்புலம்பிடு ஞாயமென்ன.

கண்ணும்மனமும் கருத்துங்கொண்டமட்டும்
காணுமடி யெங்கள் காணியடி
கண்ணும் மனமும் கருத்துஞ்சுழன்றிடக்
கஞ்சியற்ருேமடி வஞ்சியரே.

நீதியும்நல்ல நெறிமுறையுங்கொண்ட
ஜாதியடி யெங்கள் ஜாதியடி
நீதியும்நின்ற நெறிமுறையுங்கெட்ட
நிந்தனையென்னடி சுந்தரியே.

போரோடுநின்று புகழோடிறந்திட்ட
வீரர்வழிவந்த வீரரடி
தேரோடுநின்று தெருவோடலைந்திடத்
தோற்றமுமென்னடிக் கோற்றொடியே.

பார்த்ததிசை யெங்கும் பச்சைப்பசேலென்று
பார்க்குமடி யெங்கள் பாளையத்தில்
பார்த்ததிசை யெங்கும் நீத்துக்கிடக்குது
பாவமு மென்னடி பூவையரே.

மிஞ்சுவளங்கள் நிறைந்து சுகங்கள்
மிதந்துகிடந்திட்ட தேசத்திலே
பஞ்சமும் கொள்ளைப் பலவகைநோய்களும்
மிஞ்சுவதென்னடி ரஞ்சிதமே.

கூடப்பிறந்த சகோதரர்கள்மிக
வாடியிருந்து வருந்துகையில்
மோடியிருந்து தனித்துச்சுகித்ததால்
மோசம்போனேமடி மொய்குழலே.

பொங்குதடி மனம் பொங்குதடி உடல்
பொங்குதடி துயர் தங்குதடி
மங்குதடி மதி மங்குதடிமட
மங்கையரே யென்ன பங்கமடி.

என்னயென்ன மனங்குன்றுதடிவினை
என்னென்று சொல்லுவேன் கன்னியரே
பண்ணியதொல்லைப் பழவினையோயென்ன
பாபமடி எவர் சாபமடி.

பாபமல்ல வருஞ்சாபமல்ல முனி
கோபமுஞ் சாமியின் குற்றமல்ல
தாபமடிபெற்றத் தாயைமறந்ததால்
தாழ்வடைந்தோமடி தையலரே.

மாதாவின்பெற்ற வயிறெரிய நாம்
மஹேஸ்வர பூஜையைச்செய்தோமடி.
ஆதலினலிந்த வேதனைவந்ததும்
ஆச்சரியமல்ல ஆச்சியரே.

தேசமடி இந்து தேசமடி நம்மைப்
பாசமுடன் பெற்றுப் பாலித்தவள்
தேசமடி இந்து தேசமடி எங்கள்
தேவியடி எங்கள் ஆவியடி.

தேவியடி இந்து தேவியடி யெங்கள்
ஆவியடி உங்கள் ஆவியடி
பாவியடி வெகு பாவியடி படு
பாதக ரெங்களைப் பெற்றதனல்

பெற்றவ ளிந்திய தேவியடி பெயர்
இட்டவ ளிந்திய தேவியடி
உற்றவ ளிந்திய தேவியடி பால்
ஊட்டி வளர்த்தவளும் மவளே.

மாதமுமமாரி பொழிந்து செழித்திட்ட
மானிலத் துயர்ந்த தேவியடி
போதமும் வேதமும் முந்தியுரைத்திட்ட
புண்ணிய ஞானக் கிழவியடி.

முப்பத்து முக்கோடி மக்களடி இந்த
மூப்புடை இந்திய தேவிபெற்றாள்
முப்பத்து முக்கோடி மக்களுந்தானுமாய்
முச்சந்தி வீதியில் கத்துகின்றாள்.

மூப்புடை யிந்திய தேவியடிநம்மை
முன்னம்பயந்து வளர்த்தெடுத்தாள்
மூப்புடை யிந்திய தேவியடிநம்மை
இன்னும்புரந்து முகந்துடைப்பாள்.

இந்திய தேவிநமைப் பயந்தாள்கலை
இந்திய தேவிநமக் களித்தாள்
இந்திய தேவிநமைப் புரந்தாள் அந்த
இந்திய தேவியை நாம்மறந்தோம்.

எத்தனை காலஞ்சுமந்திருந்தாள் நமக்
கெத்தனை கஷ்டமனுபவித்தாள்
அத்தனைகஷ்டமு நாம்மறந்தோமவள்
அத்தனை குற்றமு மேபொறுத்தாள்.

கோடானு கோடிபகைவரடி முன்னம்
கொள்ளையடித்திட வந்தவர்கள்
கோடானு கோடியும் தான்சகித்துத்தன்
குஞ்சு குழந்தையை ஆதரித்தாள்.

எண்ணிக்கையற்ற அரசரடி இந்த
ஏந்திழைசெல்வத்தில் ஆசைகொண்டார்
எண்ணிக்கையற்ற பகைவரடி அந்த
ஏந்திழைவென்று நமைப்புரந்தாள்.

அத்தனைகஷ்டமும் தான் சகித்துநம்மை
ஆதரித்திருந்த தேவியினை
மத்தரைப்போல மறந்ததினாலிந்த
மானிலத்தேமிக ஈனமுற்றோம்.

அற்புதமான பொறுமையடி அவள்
அற்புத ஞானப் பெருமையடி
அற்புத மான சிறுமையடி இப்போ
அற்பத்தனத்தினால் தேடிவைத்தோம்.

பெற்ற வயிறுமெரியாதோ அவள்
பேதைமனமும் வருந்தாதோ
பெற்றகுழந்தைகள் தன்னைமறந்ததைப்
பெண்ணுமொருத்தி சகிப்பாளோ.

பெற்றமனமுங் கசிந்தழுது அந்தப்
பேதையுகுத்திடுங் கண்ணீரால்
பெற்றதனமும் புகழுமிழந்து நாம்
பேதைகளானது பெண்ணரசே

தாயைமறந்த குழந்தைகளெப்படித்
தாரணிதன்னில் செழிக்குமடி
தாயையிகழ்ந்த குழந்தைகளையிந்தத்
தாரணிநின்று பழிக்குமடி.

அன்னையுந் தந்தையுந் தெய்வமென்றுமுன்னம்
சொன்ன கிழவியின் வார்த்தையைப்போல்
அன்னையும் தந்தையும் அத்தையும்மாமனும்
அத்தனையும் இந்துதேசமடி.

எட்டி லடக்க முடியாது மனம்
எண்ணி எழுதவும் போதாது
பாட்டி லடக்க முடியாத புகழ்
பாவையு மிந்தக் கெதியானள்.

போனதுபோகட்டும் கண்மணியேயினி
யாகிலும் புத்தியுடனிருப்போம்
மானிலத்தாயை வணங்கினின்ருலினி
மானிலத்தே மிக நாமுயர்வோம்.

நல்லவர் கெட்டவ ரென்பதன்றிமற்றும்
நாலுவருணமு மொன்றடியே
தொல்லைச்சுருதியின் சொல்லடியே இதை
தோகையே நீயும் மறக்காதே.

முப்பத்து முக்கோடி மக்களடிநாங்கள்
முப்பத்து முக்கோடி சோதரர்கள்
முப்பத்து முக்கோடி பேருமொருமிக்க
முப்பொழுதும் அவள் பூஜைசெய்வோம்.

பூஜையென்ருல் வெறும் பூஜையல்லசெல்வப்
புண்ணிய பூமியின் பிள்ளைகளே
ஆசையுடனவள் கைத்தொழில்வித்தையை
ஆதரஞ் செய்யுங் கடமையடி.

எண்ணிக்கையற்றத் தொழிலடியே இந்த
புண்ணிய பூமியுங் கண்டதடி
எண்ணிக்கையற்றவர் இந்தியர் தொழிலே
அன்னிய தேசங்கள் ஆளுதடி.

கைத்தொழில் கெட்டுக்கலங்குதடி தேசம்
கைத்தொழிலின்றிப் புலம்புதடி
கைத்தொழில் தம்மை விருத்திசெய்தாலந்த
கண்ணுடை தேவியும் கண்விழிப்பாள்.

என்றுநினைந்து மனங்கசிந்து நாம்
இந்திய தேவியைப் போற்றிசெய்தால்
நின்ற துயரம்மறையுமடி இங்கே
நீடிய பஞ்சம் பறக்குமடி.

கண்டுகொண்டோமடி கண்மணியே இனி
காரண மின்னதெனத் தெரிந்தோம்
பண்டைச்சிறப்பினை நாமடைய இந்து
பாவை பதத்தினைப் பூஜைசெய்வோம்.

கேளுங்கடிகுறி கேளுங்கடி வந்து
விழுங்கடி அவள் பாதத்தினில்
வாழுங்கடி இனி வாழுங்கடி அவள்
வாழ்த்தியிருந்து வரங்கொடுப்பாள்.

கிட்டுங்கடி கையைத்தட்டுங்கடி மலர்
கொட்டுங்கடி அவள் பாதத்தினில்
விட்டதடி சனி விட்டதடி பழி
விட்டதடி துயர் விட்டதடி.

பஞ்சமும் நோயும்பறக்குமடி அந்தப்
பத்தினிதேவியை நாம் நினைத்தால்
பஞ்சமும்நோயும் பகைக்குமடி அந்தப்
பத்தினிதேவியை நாமறந்தால்.

இல்லையில்லை யென்றுப் பல்லையிளிப்பதும்
இல்லையடி இனி இல்லையடி
இல்லையடி பசி இல்லையடிநோய்
இந்திய தேவியை நாம் நினைத்தால்.

உத்தமமாகிய ராஜாங்கம் இனி
ஒப்பிலதாகி உயருமடி,
நித்தியமாக நிலைக்குமடி நல்ல
நீதியும் வேதநெறி முறையும்.

பொங்குமடிபால் பொங்குமடி யினி
புண்ணியபூமி மனைதோறும்
மங்குமடி வினைமங்குமடி இந்த
மங்கையை நாமும் மனதில்வைத்தால்.

ராஜ்ஜியம் பொங்கித் தழைத்தோங்க நாம்
ராஜ்ஜியத்தோடு உழைத்திடுவோம்,
ஒச்சியகோலு முயிர்த்தோங்க நாம்
ஒற்றுமையோடு உழைத்திடுவோம்.

நீதிநிலைக்க நினைத்துவருகின்ற
நிர்மலமாகிய ராஜாங்கம்
ஆதி அரசன் வழிமுறையே நின்று
ஆதித்தன்போல விளங்குமடி.

வாழிமறை பொழிவான மொடுவரு
மேழியுழவர் வழிவாழி
வாழிய கைத்தொழில் வாணிபம்தம்மொடு
வாழ்விக்க நின்றிடும் ராஜாங்கம்.

வாழிமுனிவரர் தேடியளித்திட்ட
வேதவழிவரும் நீதியெலாம்
வாழியர்ஞான முணர்ந்தோர்கள் வழி
வாழிய இந்த உலகமெலாம்.

இந்திய தேவிதனக்காகத்தம்
சொந்த சுகத்தைத் துறந்தவர்கள்
எந்தமதத்திலும் எந்தக் குலத்திலும்
வந்தவர் வந்த வழிவாழி.

# இறைவன் தன்மை

உலகெலாம் படைத்துக்காத்து
உருவிலா தழித்தநாளும்
உண்மையாய் எண்ணமாள
ஒருவனுய் அருவனுகி
சலமிலா தெண்ணுவோர்க்குச்
சத்திய மயமேயாகித்
தனித்தனி பிரித்தபோதும்
தானதிற் பிரியானுகி
மலரின்மேல் தேவனுகி
மாதொரு பாகனுகி
மாலொடு புத்தனுகி
மகம்மதாய் ஏசுவாகிப்
பலபல தெய்வமாகிப்
பற்பல மதங்களாகிப்
பக்குவப் படியேதோன்றும்
பரமனுர் பெருமை போற்றி.

*　　　*　　　*

அன்பினுக் கன்பாய்வந்து
அறிவினுக் கறிவாய்நின்று
அறிந்தவர்க் கெளியனுகி
அல்லவர்க் கரியனுகி
முன்பினும் நடுவொன்றின்றி
முதுமறை தனக்குமெட்டான்
மூடர்கள் மனத்திற்கூட
மூலையி லொதுங்கிநின்று

செம்பினும் கல்லினாலும்
 செய்தவை யெல்லாமாகிச்
சிலந்திபோற் கூடுகட்டிச்
 சிலுவையில் மறைந்தான்போல
என்பினுக் கென்பாயென்றும்
 எம்முளே விளங்குகின்ற
எழுஞ்சுடர் ஜோதியான
 இறைவனை இறைஞ்சி நிற்பாம்.

* * *

இல்லாத காலமில்லை
 இருக்கின்ற பொருளொன்றில்லை
எண்ணாத எண்ணமெல்லாம்
 எண்ணியும் எட்டவில்லை
சொல்லாத வேதமெல்லாம்
 சொல்லியும் சொன்னதில்லை
சூட்டாத நாமமில்லை
 தோன்றாத உருவமில்லை
அல்லாவாய்ப் புத்தனாகி
 அரனரிப் பிரமனாகி
அருளுடைச் சமணர்தேவும்
 அன்புள்ள கிறிஸ்துவாகிக்
கல்லாத மனத்திற்கூடக்
 காணும விருப்பாரந்தக்
கடவுளென் றுலகம்போற்றும்
 கருணையைக் கருத்தில் வைப்பாம்.

எரியினிலெறிந் திட்டாலும்
எண்ணெயிற் காய்ச்சினாலும்
ஈட்டியைக் காட்டினாலும்
யானையை ஏற்றினாலும்
ஹரியெனும் ஒருவனன்றி
அறிந்திலேன் வேறுதெய்வம்
அன்னவர்க் குரிமையன்றி
மற்றவர்க்கடிமை செய்யேன்
சரியெனத்தந்தைசெய்த
கொடுமையைச் சகித்துநின்று
தனக்கிடர் செய்தபோதும்
தானது செய்யானந்தச்
சிறுவனைக் காத்தசேதி
தினம்வர நாமக்கல்லில்
நரஹரி உருவுகாட்டும்
ஒருவனைத் துதித்துநிற்பாம்.

*　　　*　　　*

இல்லையென்று சொல்வதற்கும்
இருக்கின்ற ஒருபொருளாய்
இருப்பதென்பார் ருசுப்படுத்த
இல்லாததும் அதுவாய்
அல்லவென்று மறுப்பதிலும்
அங்கிருந்து பேசுவதாய்
‘ஆம்’ என்ற மாத்திரத்தில்
அறிந்துவிட முடியாதாய்

வல்லமென்றே அகங்கரித்தால்
பலங்குறைக்கும் வல்லமையாய்
வணங்கியதைத் தொழுவார்க்கு
வலுவில்வரும் பெருந்துணையாய்
சொல்லை யொத்துச் செயல்மனமும்
தூயவர்க்கே தோற்றுவதாய்
சொல்வதற்கு முடியாத
சுத்தசத்தைத் தொழுதிடுவோம்.

# கண்டிலேன்

ஐயம் இல்லை தெய்வம் உண்டென
பையப் பைய என்னைப் பழக்கி
அன்னை என்னுடைச் சின்ன வயதில்
சொன்னது மட்டும் இன்னும் மறந்திலேன்.
உண்டு என்பதைக் கண்டிலேன் தெளிய
பண்டைநம் முன்னோர் பகர்ந்ததை யெல்லாம்
படித்துப் பார்த்தேன் பாடமுங் கேட்டேன்
ஒடித்துப் பிரித்து ஊன்றி எண்ணினேன்,
"நீறு பூசினால் நேர்ந்திடும்" என்றார்
நீறு பூசியென் னேரமுங் கழித்தேன்,
"கண்டிகை தரித்தால் காணலாம்" என்றார்
கண்டிகை கனத்தும் கண்டிலேன் பொருளை
"நாமம் தரித்தால் நாடலாம்" என்றார்
நாமம் புனைவதில் நாள்பல கழித்தேன்.
"துளசியும் மாலையும் துணைசெயும்" என்றார்
துளசியும் தொடுத்தேன்; மணிகளும் சுமந்தேன்
"பஜனை செய்தால் பலித்திடும்" என்றார்
பஜனைக் கோஷ்டியில் பாடினேன் பலநாள்.
"ஊனும் உயிரும் அவனே" என்றார்
ஊனிலும் காணேன், உயிரிலும் காணேன்,
"கோயிலும் குளமும் குடியிருப்" பென்றார்
கோயிலில் தேடினேன்; குளத்திலும் முழுகினேன்,
"வேத நூல்களில் விளங்கிடும்" என்றார்
வேதமும் கேட்டேன், விளங்கவே இல்லை.

"மந்திரம் கற்ருல் வந்திடும்" என்ருர்.
மந்திரம் ஜெபித்தேன், தந்திரம் பலித்திலேன்.
"பட்டினி யிருந்தால் பார்க்கலாம்" என்ருர்,
பட்டினி விரதம் பழகியும் பார்த்தேன்.
மூச்சை அடக்கினுல் முன்வரும்" என்ருர்,
"மூச்சைப் பிடித்து முயன்றும் பார்த்தேன்.
கண்டிலேன் அந்தக் கடவுளை ; அதனுல்
பண்டைய வழிகளில் பயனிலை போலும்.
"எந்தையர் சொன்ன ஹிந்து மதத்திலே
இந்த ரகசியம் இல்லையோ" என்று
மதங்கள் என்று மற்றவர் சொன்ன
விதங்களை எல்லாம் விரித்திடும் நூல்கள்
புத்தகம் பற்பல புரியப் படித்தேன்
வித்தகர் சொன்ன விளக்கமுங் கேட்டேன்
புதுப்புது வழிகளில் புகுந்து புகுந்து
மதிப்புள எல்லா மார்க்கமும் போனேன்.
செல்லா வழியென எண்ணிநான் சென்ற
எல்லா வழிகளும் என்னைக் கொண்டுபோய்
முன்னே யிருந்த மூலையே சேர்த்தன.
என்னே! தெய்வம் எங்கோ! எதுவோ!
இருந்த இடத்தில் இல்லையென் றெண்ணி
திரிந்த இடத்திலும் தெரிந்திட வில்லையே!
இல்லையென் றுரைக்கத் தைரியம் இல்லை.
தொல்லையென் றதனைத் துறக்கவும் துணிவிலை.
இல்லையே ஆனுல் தொல்லையே இல்லை.
நல்லதே நம்மைக் கேட்பா ரில்லை.
இருப்பது உண்மைதான் என்ருலும் என்ன ?
பொறுப்பது அவர்க்கே, காத்தருள் புரியும்.

# மஹாத்மா

இத்தனைநாள் உலகமெலாம் இருந்தறிந்த
பெரியவர்கள் இசைத்தஞானம்
அத்தனையும் ஒருருவாய்த் திரண்டதெனக்
கலியுகத்தே அவதரித்தோன்
சத்தியமே மந்திரமாய் சாந்தமொன்றே
தந்திரமாய் சமயம்தந்த
உத்தமனும் காந்திமுனி உச்சரித்த
சாத்விகத்தை உறுதிகொள்வாம்.

அன்புடைய பெயரையெல்லாம் ஆபத்தில்
அறியலாம் அதனைப்போல
மன்பெரிய இந்தியத்தாய் மிடிமையுற்று
அடிமையினல் மனமேநொந்து
துன்பமுரு மிந்நாளில் துணையெனவே
முன்னின்று துயரந்தாங்குந்
தெம்புடைய தேசபக்தர் யாரெனினும்
அவர்புகழைச் செப்புவோமே.

# காந்தியே வாழ்க! வாழ்க!!

ஏட்டளவிருந்த வேதம்
இதுவென எடுத்துக்காட்டி
எழுத்தள விருந்தகீதம்
செய்கையில் ஏந்திநின்று
விட்டள விருந்தகாதல்
விருந்தோடு விரியச்செய்து
விருந்தள விருந்தநேசம்
வியன்பெரு நாட்டிற்காக்கி
நாட்டள விருந்த அன்பை
நானிலம் முழுதுங்காட்டி
நானிலத் தேவர்க்கும் அன்பே
நாதனைக் காண்பதென்று
காட்டினை சொல்லாலல்ல
ஒழுக்கத்தால் கருணைவாழ்வின்
காந்தியே வீசும் சாந்தக்
காந்தியே வாழ்க! வாழ்க!!

பக்தியென் றுடுகின்றேம்
பஜனையாம் பாடுகின்றேம்
பாகவத மென்றுபல
படிப்போம் நித்தம்
முத்தியென் றேதுகின்றேம்
மோட்சமே பேச்சிலெல்லாம்
மோனமென ஞானமென
மொழிவோம் முற்றும்

சத்தினைப் போகவிட்டுச்
சக்கையைப் பற்றிவாழ்ந்தோம்
சாத்திரத்தின் சாரமதை
உணர்ந்த தக்கோர்
கத்துவ தென்றும் மாறு
ஒழுக்கத்தின் கருணைவாழ்வின்
காந்தியே விசும்சாந்தக்
காந்தியே வாழ்க ! வாழ்க !!

நெற்றியில் நீறு நாமம்
நிறைந்திடப் பூசியென்ன ?
நியமமும் நிஷ்டையென்று
நீண்டதால் நேரமென்ன ?
ப்ற்றிய ஜெபம் செய்மாலைப்
பகலிரவிருந்து மென்ன ?
பார்த்தவர் மருளும்யோக
ஆசனம் பழகியென்ன ?
சுற்றிய எவரும் நம்மால்
துன்புறுத் தூயவாழ்வும்
தோன்றிய ஜீவரெல்லாம்
துணையெனக் கருதுமன்பும்
கற்றனை வாழ்வில் என்றும்
காட்டினை கருணைவாழ்வின்
காந்தியே வீசும் சாந்தக்
காந்தியே வாழ்க ! வாழ்க !!

திடமொடு உதித்த ஞானத்
திருவருளடைந்த பேரும்
தெளிந்தவர் மொழிந்தவற்றைத்
தினைந்ததில் தெரிந்தபேரும்
அடவியில் இருந்துநாளும்
அருந்தவம் புரிந்தபேரும்
அடைக்கலம் குருவைநாடி
அருள்வழி அறிந்தபேரும்
இடம் நிறம் காலமென்னும்
இவைகளில் எதில்வந்தாரும்
இவ்வுல குதித்தபின்னர்
இந்தநா ளளவும்யாரும்
கடவுளின் இருக்கைகண்டோர்
காட்டிய கருணைவாழ்வின்
காந்தியே வீசும் சாந்தக்
காந்தியே வாழ்க! வாழ்க!!

முனிவரர் கோடிகோடி
முயற்சியால் சிறந்தநாட்டை
மூடவெம் மதியினாலே
முயக்கினோம் அடிமைவாழ்வில்
தனிவரும் துயரில், நோயில்,
தரித்திரத் தாலேவாடி
தளர்ந்திடும் ஏழைமக்கள்
துயரத்தைத் தாங்கினின்றாய்

இனிவரும் அனித்தேயென்று
எண்ணவும் முடியாமேன்மை
இப்பெரும் உன்னைப்பெற்றும்
சோம்பினேம் இகழ்ந்துநின்றேம்
கனிபெருந் தூயவாழ்வின்
கண்ணெனும் கருணைவாழ்வின்
காந்தியே வீசும்சாந்தக்
காந்தியே வாழ்க! வாழ்க!!

என்கடன் பணிகள் செய்து
கிடப்பதே யென்று முற்றும்
ஏழைகட்காக வாழ்ந்தோர்
எண்ணிலா ரிருந்தநாட்டை
துன்புடை யடிமைவாழ்வின்
துயரிடை யழுத்திவிட்டோம்
தூயவர் சொல்லையெல்லாம்
தூற்றினேம் காற்றிலேயோ!
வன்பெரும் மிடியால்வாடும்
வறியவர்க் குழைத்தாலன்றி
வாழ்விலை நமக்கேயென்று
வகுத்தனை யுணர்ந்தோமையா
கன்மனமுடையோரேனும்
கனித்திடும் கருணைவாழ்வின்
காந்தியே வீசும் சாந்தக்
காந்தியே வாழ்க! வாழ்க!!

# அற்புதன் காந்தி

ஜெயஜெய காந்தியின் திருப்புகழ் பாடி
தெய்வம் தொழுவோம் அனைவரும் கூடி
பயனுற இன்னமும் பற்பல ஆண்டுகள்
பகவான் காந்தியை காத்திட வேண்டும். ஜெய

காந்தியின் வாழ்வே கடவுளைக் காட்டும்
கல்விகள் தேடிடும் கருணையை ஊட்டும்
சாந்தியைப் புகட்டிடும் சாத்திரம் அதுவே
சத்திய நெறிதரும் சூத்திரம் அதுவே. ஜெய

இந்திய மக்களின் சுதந்திர கீதம்
எம்மான் காந்தியின் இணையறு போதம்
சிந்தனை செய்வார் வந்தனை புரியும்
தெய்விக மந்திரம் அதுவெனத் தெரியும். ஜெய

இல்லறம் துறவறம் இரண்டிலும் சிறந்து
இந்திய விடுதலைக் கருந்தவம் புரிந்து
சொல்லறம் முழுவதும் சுதந்தர தேவி
தாமலர்ப் பதங்களில் தொழுதனன் தாவி. ஜெய

நால்வகை யோகமும் நடத்திடும் ஞானி
நாட்டின் பெருமையைக் காத்திடும் மானி
தோல்வியும் வெற்றியும் தொடமுடியாது
துலைபோல் சமரச நிலைபிரியாத ஜெய

அரசியல் சூதுகள் அனைத்தையும் அகற்றி
அன்பின் வழிவரும் ஆற்றலைப் புகுத்தி
உரைசெயல் அரிதெனும் உறுதியைக் கொடுத்து
உலகினில் புதிதெனும் அறப்போர் தொடுத்த ஜெய

மண்டலம் முழுவதும் சண்டைகள் மலிய
மாந்தர்கள் பெருந்துயர் சேர்ந்துளம் நலிய
கண்டுள பின்னரும் காந்தியை நினையார்
கல்லையும் மண்ணையும் கட்டையும் அனையார் ஜெய

யுத்தக் கொடுமைகள் உலகினில் ஒழிய
உதித்தநம் காந்தியின் உயர்நல வழியை
இத்தரை யெங்கணும் பரப்பிடும் கடமை
இந்திய மக்களின் பரம்பரை உடைமை ஜெய

காந்தியின் அருந்தவம் பலித்திடும் காலம்
கண்முன் இருப்பதை அறிந்திலம் போலும்
ஓய்ந்திடும் சண்டையின் ஒவ்வொரு நாடும்
ஒப்பரும் காந்தியின் உரைகளைத் தேடும் ஜெய

இமயமும் குமரியும் இருக்கிற வரைக்கும்
இப்பெரும் உலகினில் அவன் பெயர் சிறக்கும்
சமயமும் நிறங்களும் சமனெனக் கருதும்
சகலரும் காந்தியை வணங்குவர் பெரிதும் ஜெய

சங். 5.

மன்னரும் வீரரும் மந்திரி மார்கள்
மண்ணொடு மண்ணாய் மறைந்திடு வார்கள்
உன்னரும் காந்தியின் பெரும்பெயர் ஒன்றே
உலகினில் நிரந்தரம் உயர்ந்திடு மன்றோ 'ஜெய

இன்னொரு தம்பதி இவர்களைப் போல
எங்குளர், என்மனம் களித்திடும் சீலம்
அன்னைகஸ் தூரியின் அரும்புகழ் சூடும்
அற்புதன் காந்தியர் நெடுநாள் வாழும். 'ஜெய

# சத்தியமூர்த்தி நம் காந்தி

சாந்தியே உருவாய்வந்த
சத்திய மூர்த்தியான
காந்தியே உம்மைக்காணக்
கணக்கிலா ஜனங்களெங்கும்
காந்தமொன் றணுகவோடும்
ஊசிகள் காட்சிபோலப்
போந்ததும் தரிசனத்தால்
பொறுமையைக் கற்கவேண்டி

மூவுல கொருங்கே யாண்டு
முடிவிலாச் செல்வமெய்தி
ஏவலில் மமதைகொண்ட
ஹிரணியன் உய்யுமாறு
தாவிய தூணிலன்று
தனியுருத் தாங்கிவந்த
சேவகன் மெச்சுகின்ற
சிறுவனே யன்னசீலா.

பகையினல் கொன்றுவென்று
பயப்பட வாழ்ந்துவந்த
வகையிலாச் சாதியோரை
வழிப்படச் செய்யவேண்டி
மிகமிகத் துன்பமுற்றும்
மென்மையால் வென்றுகொண்ட
மகம்மது நபியே என்று
மதியுளார் சொல்வா ருன்னை.

அன்பொரு உருவாய் வந்து
அற்புதச் செயல்கள் காட்டி
துன்பமே சூழ்ந்த தெய்வத்
துரோகிகள் செய்கை யாலே
வன்பெரும் சிலுவை தன்னில்
வைத்தவர் அறைந்த போதும்
இன்பமே நுகர்ந்த தேவன்
ஏசுவே என்பா ருன்னை.

கனவினிற் பிணிமூப் போடு
சாவினைக் கண்ட பின்னர்
இனியிதன் ரகசி யத்தை
இன்னதென் றறிவோ மென்று
கனதன ராஜ போகக்
கட்டெலாம் விட்டொழித்த
புனிதன்அப் பௌத்த னென்று
போற்றுவா ருன்னை யாரும்.

அடிதடி வாழ்க்கை கொண்டு
அன்பினை மறந்து நாளும்
கொடியதாம் பணப் பேயாலே
குவலயம் அயர்ந்து நொந்து
முடிவிதற் கெங்கே யென்று
முறன்படு கின்ற காலை
விடிவது பொழுது போல
விசிய துந்தன், காந்தி.

குண்டுபீ ரங்கி யாலும்
கோடியந் திரங்க ளாலும்
மண்டிய செல்வத் தாலும்
மயக்கிடும் பொருள்க ளாலும்
சண்டைகள் ஜயத்தி னாலும்
சலிப்பின்றிச் சுகமெங் கென்று
மண்டல மிருண்ட போது
மதியெனத் தோன்றினாய் நீ.

சாந்தமொன் றில்லை யென்றால்
சௌக்கிய மில்லை யென்று
ஆய்ந்தவர் சொன்ன தெல்லாம்
அகந்தையால் மறந்து விட்டு
மாந்தினர் கள்ளே யென்ன
மயக்கமுற்றிருந்த காலை
காந்தியென் றொருவன் தோன்றிக்
காத்தனன் உலகை யென்ப.

சத்தியன் என்பா ருன்னைச்
சாந்தமே யென்று சொல்வார்
பித்தனே யாவான் என்பார்
பேடியென் றொருசார் சொல்லும்
சுத்தனே என்பா ரில்லைத்
துரோகியென் பாரு முண்டு
இத்தனைப் பெயரும் தாங்கும்
இதுவன்றோ பெரியார் செய்கை.

நம்மையும் புனித ராக்கி
நம்மை யாண் டடிமைசெய்வார்
தம்மையும் புனித ராக்கித்
தரணியில் தரும நீதி
மும்மையும் உயிர்க்கச் சாந்த
மூலமந் திரத்தைக் காட்டும்
செம்மைசேர் ராட்டி. னத்தின்
திகிரியைச் சுழற்றி விட்டாய்.

உனைவிடப் பெரியா ரிந்த
உலகினில் இல்லை யென்று
நினைவினிற் பெரியா ருன்னை
நிரந்தரம் போற்று கின்றார்
இனியவுன் பெருமை யெல்லாம்
இந்திய மாதா பெற்றாள்
அனையவள் பெற்ற கீர்த்தி
அடியமும் பெற்ற தன்றோ ?

ஆண்டவன் ஆணை தாங்கி
அன்பினை நாட்ட வென்று
பூண்டவுன் கொள்கை யெங்கும்
பூமிவே ரூன்று மட்டும்
நீண்டுஉன் ஆயுளோங்க
நிமலனும் கடவுள் மாட்டு
வேண்டுவோம் என்று சொல்லல்
வெற்றுரை யாரு மன்றே.

# பூனா வெடிகுண்டு

விந்தையில் விந்தை ! காந்தியின் மேலும்
வெடிகுண்டை யாரோ வீசினராம் !
ஹிந்து மதத்தில் வந்தவர்யாரும்
இப்படியும் செய்ய ஒப்புவரோ !
நிந்தையில் நிந்தை இதைவிட வேறும்
இந்திய நாட்டிற்கு வந்திடுமோ
இந்தவிபத்தில் காந்தியைக் காத்தது
எந்தப் பொருளதைச் சிந்தைசெய்வோம்.

சத்தியம் மெய்யே, சாந்தமும் மெய்யே
சாதித் துயர்ந்திட்ட சாதுக்கள் மெய்
நித்தமும் நின்று நம்மை நிறுத்து
நீதி செலுத்திடும் ஜோதியும் மெய்
பொய்த்திடும் பொய்யே போனது ஐயம்
புண்ணியம் என்பது உண்மை அதை
உத்தமர் காந்தியின் மெய்த்தவ வாழ்வினில்
உண்டு வெடித்திட்ட குண்டும் சொலும்.

மடமையி னாலே செய்தனர் என்றே
மன்னித்து வாழ்த்திய பொன்னுரை யால்
அடவியிற் சென்றே ஐம்புலன் வென்றார்
அந்தணர் முந்துரை தந்தவெலாம்
நடைமுறை தன்னில் தினசரி வாழ்வில்
நாட்டிடைக் காந்திஜி காட்டிவிட்டார்
கடவுளும் உண்மை ; கருணையும் உண்மை ;
காத்திடும் என்பதும் பார்த்துவிட்டோம்.

தாழ்ந்தவ ரேனும் வாழ்ந்தவ ரேனும்
சத்தியம் நாடிய பக்தரல்லால்
வேந்தருங் காணு வேதியர் காணு
வேருெரு சக்தியின் பேரருளால்
மாந்தருள் தெய்வம் நம்பின வர்க்கு
மனத்துறை இன்பம் எனத்தகுமோர்
காந்தியும் தப்பிக் கருணையும் தப்பிக்
கடவுளும் தப்பிப் பிழைத்தனரே !

பொங்கிய "போலி"ச் சநாதன கோபம்
பூனுவில் அன்று வெடித்ததுவோ
அங்கொரு தீங்கும் யாருக்கு மின்றி
அன்புருக் காந்தியும் துன்பமிலார்
சங்கெடுத் தூது மங்களம் பாடு
சாந்தி உலகுக்குக் காந்தியினுல்
எங்கணும் சாந்தி யாவர்க்கும் சாந்தி
என்ற முதுமறை நின்றதுபார்.

# மனிதர்கள் கடவுளாகார்

மனிதர்கள் கடவுளாகார்
கடவுளர் மனிதராவார்
புனிதமும் பொறுமையாவும்
பொய்யிலா வாழ்வும்பற்றி
கனதையும் கருணைபொங்கும்
காந்திபோல்வாரைவிட்டு
இனியொரு கடவுளென்பார்
எங்குளார்? எங்குளாரே?

# சத்திய சீலன்

துறந்தவர் மிகுந்த நாட்டைத்
    துறந்திடும் துன்பமெல்லாம்
துறந்தவர் குறைந்தநாட்டைத்
    தொடர்ந்திடும் துன்பமெல்லாம்
அறிந்தவர் மொழிகளாலும்
    அனுபவ அறிவினாலும்
அறிந்தனம் அதனையிந்த
    தேசமும் மறந்ததந்தோ !

வான்முறை மழைபெய்யாது
    மாநிலம் வளமைகுன்றும்
கோன்முறை கோணும்மற்றும்
    குடிவளம் குறைந்துவாடும்
சான்வயிறதற்குக்கூடச்
    சரிவரக்கிடைக்காதூணும்
'தான்' எனும் அகந்தைநீத்த
    தவசிகள் குறைந்தநாட்டில்.

அன்ன அத்துறவுபூண்டோர்
    அரிதெனப்போனதாலோ
சொன்னவர் துறவி யென்றோர்
    தூய்மையிற் குறைந்ததாலோ
முன்னையவளங்கள் குன்றி
    முதுமறைப்பெருமைவிட்டுக்
குன்றிய வாழ்க்கைவந்து
    குறைந்ததிப் பரதநாடு.

அக்குறை நீங்கவென்றே
ஆண்டவன் அனுப்பிவந்தோன்
இக்கணம் இந்தநாட்டின்
இருள்மிகும் அடிமைநீங்க
முக்குணம் அவற்றுள் போற்றும்
முதற்குணவழியேகாட்டும்
சத்குருவான காந்தி
சத்தியசிலன்தானே.

தாங்கண்ட இன்பம் இந்தத்
தரணியோர் பெறுமாறெண்ணி
ஆங்கென்றும் ஈங்கென்றோடி
அறப்பறை அடிக்கும் காந்தி
தீங்கென்றுஉலகம் சொல்லும்
செய்கை ஓர் சிறிதுமில்லார்
நாங்கொண்ட பெருமைஎங்கும்
நல்லவர் யாருங்கொள்வார்.

கடவுளே பொய்யென்றாலும்
கண்டவரிலை யென்றாலும்
உடலுலகுயிர் ஒன்றிற்கும்
ஒருசிறு தீங்குமெண்ணுர்
கடனறி சாந்தக்குன்றும்
காந்திபோல் வாரையன்றி
உடலுயிர் உள்ளார் தம்மில்
உவப்பது யாரை? யாரை?

நம்பின பேருக்கேனும்
　　நம்புதலற்ருர்க்கேனும்
அம்புவி ஏழைக்காக
　　அருந்துயர் அனைத்தும்தாங்கி
வெம்பிய செய்தாருக்கும்
　　வெருவுளஎண்ணுர் சொல்லார்
இம்பரின் காந்திவாழ்வை
　　இலையென மறுக்கப்போமோ?

ஈரமும் இரக்கம் மட்டும்
　　இருப்பவர் யாரும் எங்கும்
ஓரமும் பொய்யும் நீக்கி
　　உயர்குணம் யாவும்காத்து
யாரொரு சிறியார்க்கேனும்
　　யாதொரு தீங்கும் ஒப்பார்
சீரியர் காந்தி வாழ்வைச்
　　சிறப்பியா திருப்பதெங்ஙன்?

ஒன்றினை ஒன்றுமாய்த்து
　　ஒருவரை ஒருவர்வாட்டித்
தின்றுடல் சுகிக்குமிந்தத்
　　திமைசூழ் உலகந்தன்னில்
தன்றுணைச் சுகங்கள்விட்டுத்
　　தளர்ந்தவர்க் குடலையிந்து
நின்றிடும் காந்தி வாழ்வை
　　மறப்பதோ நினைப்பதோதான்.

தன்னுயிர் போவதேனும்
பிறர்துயர் சகிக்கமாட்டார்
பொன்னுயிர் பொதுமைக்கீந்துப்
பொறுப்பது மானம் அஃதே
இன்னுயிர் மனிதவாழ்வின்
ரகசிய மாகுமென்று
உன்னிய காந்திவாழ்க்கை
தாழ்ந்ததோ உயர்ந்ததோதான்.

"வாழ்ந்தவர் வாழ்ந்தவாழ்வின்
வழியிழிவழக்கத்தாலே
"தாழ்ந்தவர்' என்பார் தம்மைப்
பிரிகலேன், பிரித்துவைத்தால்
வீழ்ந்துயிர் விடுவேன்" என்ற
காந்தியின் விரதவார்த்தைப்
போழ்ந்துளங் கலங்கிடாதார்
பூமியில் உண்டோ மக்கள்?

'சத்தியம்' சாந்தம் என்னச்
சலிப்புறக் கேட்டதெல்லாம்
பொத்திய உடை ஒன்றோடு
புறத்தொரு அழகுமின்றி
நித்தமும் தன்பாற்குற்றம்
நெருப்பெனக் காய்ந்துநீக்கி
சுத்தமாம் காந்தியாகத்
தோன்றிடக் கண்டோம் இன்று.

'சாந்தம்' என்றது தான்
இன்று சபர்மதி சாலைநீங்கி
ஏந்திய கொள்கைக்காக
எறவாடாசிறையிற்றங்கி
பாந்தவர் தாழ்ந்தவர்க்காப்
பட்டினியிறப்பேனென்று
ஆய்ந்தவர் அறிவில் என்றும்
காந்தியாய் அரசுகொள்ளும்.

சத்தியம் வெல்லுமென்றால்
தவமது பலிக்குமானால்
உத்தமன் கடவுளென்ற
ஒருபொருள் உண்மையானால்
இத்துறை எங்கள் காந்தி
இடருறுவண்ணங் காத்து
வைத்திடவேண்டும் இந்த
வையகம் வாழ்த்தும் என்றும்.

# சாத்வீகம்

இத்தனை நாள் உலகமெலாம் இருந்தறிந்த
பெரியவர்கள் இசைத்தஞானம்
அத்தனையும் ஒருருவாய்த் திரண்டதெனக்
கலியுகத்தே அவதரித்தோன்
சத்தியமே மந்திரமாம் சாந்தமொன்றே
தந்திரமாம் சமயம்தந்த
உத்தமனும் காந்திமுனி உச்சரித்த
சாத்விகத்தை உறுதிகொள்வாம்.

# சங்கநாதம் கேட்குது

சாந்த காந்தி சத்தியத்தின்
சங்கநாதம் கேட்குது
ஆய்ந்து பார்க்கத் தேவையில்லை
அதிலிருக்கும் நன்மையை
மாந்தருக்குள் சமூகவாழ்வு
மாறுமிந்தப் பொழுதிலே
சோர்ந்திடாமல் நமதுநாட்டை
துயில் எழுப்பும் ஓசையாம்.

இடிஇடித்து மின்னல் மின்னி
இருள் கவிந்து எங்கணும்
கிடுகிடுத்து உலக மெங்கும்
கிலிபிடித்த வேளையில்
குடுகுடுத்த கிழவர் காந்தி
குமரர் நாணைக் கூவினர்
துடிதுடித்து உண்மை போற்றும்
தொண்டர் யாரும் கூடுவோம்.

வீடுபற்றி வேகும் போது
வீணை மீட்டும் வீணர்போல்
நாடு முற்றும் புதிய வாழ்வை
நாடுகின்ற நாளிலே
பாடுமிக்கச் சேவை விட்டுப்
பதவிமோகம் பற்றினல்
கேடு என்ற எச்சரிக்கை
கிழவர் காந்தி கூக்குரல்

கடல் கலங்கப் புயலடித்துத்
தத்தளிக் கும் கப்பலின்
திடமிருந்து தெளிவு கொண்ட
திசை யறிந்த மாலுமி
இடமறிந்து காலம்கற்ற
இந்தநாட்டின் மந்திரி
கடனறிந்த காந்திபோதம்
கவலைபோக்கும் மந்திரம்.

கர்மவீரன் காந்தி என்னும்
காளமேகம் கர்ஜனை
தர்மமான மழை பொழிந்து
தரணிமுற்றும் குளிரவே
வர்மமான வார்த்தையாவும்
வாது சூது செய்திடும்
மர்மமான எதையும் விட்ட
ராஜமார்க்க மதிதரும்.

வீரமென்றும் சூரமென்றும்
வெறிகொடுக்கும் பேச்சினல்
காரமுள்ள வார்த்தையாவும்
யாரைஎன்ன செய்திடும்.
தீரர்ஞான காந்திசங்கம்
திசைமுழங்கக் கேட்குது
சேரவாரும் மனிதவாழ்க்கை
சீர்திருத்த வேண்டுவோர்.

# வீரத்துறவி

ஆண்மை உருக்கொண்ட அந்தணன்—எங்கள்
அண்ணல் விவேகா னந்தனின்
மாண்பை அளந்திட எண்ணிஞல்—இந்த
மண்ணேயும் விண்ணேயும் பண்ணலாம்.

காமனைப் போன்ற அழகினுன்—பொல்லாக்
காமத்தை வென்று பழகினேன் ;
சோமனைப் போலக் குளிர்ந்தவன்—ஞான
சூரியன் போலக் கிளர்ந்தவன்.

வீரத் துறவறம் நாட்டினுன்—திண்ணே
வீணர்வே தாந்தத்தை ஓட்டினுன் ;
தீரச் செயல்களை நாடினுன்—இந்தத்
தேச நிலைகண்டு வாடினுன்.

காமத் தவநெறி காட்டினுன்—நல்ல
காரிய வீரியம் ஊட்டினுன் ;
மர்மம், பலிதரும் பூசைகள்—ஹிந்து
மதமல்ல என்றுண்மை பேசினுன்.

“ உலகை வெறுத்துத் துறந்தவர்—தெய்வ
உள்ளக் கருத்தை மறந்தவர்
கலக நடுவிலும் தங்குவேன் ” என்று
கர்ஜனை செய்திட்ட சிங்கமாம்.

பெண்ணின் பெருமையைப் போற்றினன்—ஆண்கள்
பேடித் தனங்களைத் தூற்றினன் ;
மண்ணின் சுகங்களை விட்டவன்—ஏழை
மக்களுக்காய் கண்ணீர் கொட்டினன்.

ஏழையின் துன்பங்கள் போக்கவும்—அவற்கு
எண்ணும் எழுத்தறி வாக்கவும் ;
ஊழியம் செய்வது ஒன்றுதான்—தேவை
உண்மைத் துறவறம் என்றுளான்.

தேசத் திருப்பணி ஒன்றையே—உண்மைத்
தெய்வத் திருப்பணி என்றவன் ;
மோசத் துறவுகள் போக்கினன்—பல
மூடப் பழக்கத்தைத் தாக்கினன்.

அடிமை மனசை அகற்றினன்—உயர்
அன்பின் உறுதி புகட்டினன்
கொடுமை அகற்றிட முந்திடும்—தவக்
கூட்டத்தை நாட்டுக்குத் தந்தவன்.

ஐம்பது ஆண்டுகள் முன்னமே—செல்வ
அமெரிக்கச் சிக்காகோ தன்னிலே
நம்பெரும் இந்திய நாட்டவர்—கண்ட
ஞானப் பெருமையைக் காட்டினன்.

வெள்ளையர் பாதிரி மாரெலாம்—கேட்டு
வெள்கித் தலைகுனிந் தார்களே !
தெள்ளிய ஞானத்தைப் போதித்தான்—அவர்
திடுக்கிட உண்மைகள் சாதித்தான்.

சத்திய வாழ்க்கையைப் பேசினன்—அருள்
சாந்தத் தவக்கனல் வீசினன் ;
யுத்தக் கொடுமையைச் சிந்திப்போம்—அந்த
உத்தமன் சொன்னதை வந்திப்போம்.

# பாரதியார்

பாரதி எனும் பெயரைச் சொல்லு—கெட்ட
பயம்எனும் பகைவனை வெல்லு
நேரினி உனக்குநிகர் இல்லை—உடன்
நீங்கும் அடிமைமனத் தொல்லை.

சுப்ரமண்ய பாரதியின் பாட்டு—பாடி
சோம்பல், மனச் சோர்வுகளை ஓட்டு,
ஒப்பரிய தன்மதிப்பை ஊட்டும்—அது
உன்பலத்தை நீ உணரக் காட்டும்.

துள்ளிக் குதித்துவரும் சந்தம்—செயல்
தூண்டித் துணைபுரியச் சொந்தம்
அள்ளிக் கொடுத்தபெரும் உறவோன்—நம்
அருமை பாரதியை மறவோம்.

அன்புநி றைந்ததமிழ் மொழியில்—செயல்
ஆண்மை குறைந்ததெனும் வழியில்
தெம்பு மறைந்துமுன்ற போதின்—நல்ல
திரம் கொடுக்கவந்த தூதன்.

அமைதி குலவும்தமிழ்ச் சொல்லில்—பல
ஆற்றல் புகுத்திவிட்ட வல்லன்
நமது பாரதியின் பாட்டே—தமிழ்
நலத்தைக் காக்கும் ஒரு கோட்டை.

இனிமை யானதமிழ் பாஷை—அதில்
'இல்லை வேகம்' எனும் ஓசை
முனகிப் பேசும் ஒரு வகையை—வென்று
முழங்கும் பாரதியின் இசையே.

முன்னோர் பெருமைமட்டும் பேசி—புது
முயற்சி ஒன்றுமின்றிக் கூசி
சின்னு பின்னமுற்று வாடும்—நாம்
சீர் திருந்தக் கவி பாடும்.

அடிமைப் படுகுழியில் வீழ்ந்தோம்—வெறும்
அரிசிப் புழுக்களெனத் தாழ்ந்தோம்
கொடுமை கண்டுமனம் கொதித்தான்—கவி
கொட்டி வீரியத்தை விதைத்தான்.

ஊனைப் பெரியதெனக் கொண்டோம்—ஆன்ம
உணர்வை விற்றுருசி கண்டோம்
மானம் போகும்என்ற நிலைமை—தனை
மாற்றும் பாரதியின் புலமை.

பண்டைச் சிறப்புகளைப் பாடி—கிழப்
பாட்டிகள் கூட்டமெனக் கூடி
அண்டிப் பதுங்கிவிட்ட நாட்டில்—நவ
ஆர்வம் வளர்த்ததவன் பாட்டே.

தீரன் அறிவுரையை இகழ்ந்து—வெறும்
திவசம் நடத்திமட்டும் மகிழ்ந்து,
பேரைக் கெடுத்துவிட மாட்டோம்—எனும்
பிரதிக்ஞை பூண்டுவரம் கேட்போம்.

கவிஞன் வாக்குறுதி பலிக்கும்—நம்
கவலை தீர்ந்துநலம் ஜொலிக்கும்
புவியில் கீர்த்தியுடன் வாழ்வோம்—வெகு
புதுமை யாகஅர சாள்வோம்.

வாழ்க பாரதியின் அருமை—அதில்
வளர்க தாய்மொழியின் பெருமை
வாழ்க வையகத்தில் யாரும்—பிணி
வறுமை அச்சமற்று வாழ்க.

# திரு. வி. க.

சலியாத சேவையும் தளராத ஊக்கமும்
தணியாத ஆர்வமுள்ளோன் ;
நலியாத சொற்களால் நவசக்தி யூட்டிடும்
நயமிக்க தேசபக்தன் ;
நிலையான கல்வியின் நெளியாத கொள்கையின்
நேரான நெறியில் நிற்போன் ;
கலியாண சுந்தர முதலியார் தமிழன்பர்
கண்ணுனை ஒருவனுகும்.

பாடெலாம் தான்பட்டுப் பலனெலாம் பிறர்கொள்ளப்
பங்கின்றி உதவுபண்பன் ;
ஏடெலாம் மேல்எனும் 'என்கடன் பணிசெய்தல்'
என்பதே எண்ணியெண்ணி
நாடெலாம் வாழவே நாளெலாம் தன்சுகம்
நாடாது பாடுபடுவோன் ;
வீடெலாம் தமிழ்மக்கள் கலியாணசுந்தரன்
வெற்றிகொண் டாடவேண்டும்.

கொல்லாமை பொய்யுரை கூருமை என்பதே
குறியாகக் கொண்ட தமிழை,
கல்லாத பேர்களும் களிகொள்ளத் தந்திடும்
கலியாண சுந்தரத்தின்
செல்லான அறுபதாம் ஆண்டுத் திருநாளிலே
தெய்வத்தைச் சிந்தை செய்து
வல்லாண்மை குறையாமல் நூருண்டும் அவன்வாழ
மனமார வாழ்த்துகின்ருேம்.

# உள்ளங் கவர்ந்த பண்டிதர்

'பண்டிதர்' என்ருல் பள்ளிக் கூடப்
பையன் களுக்குப் பரிகா சச்சொல்.
ஆங்கிலப் பாடத்து ஆசான் மாரும்
கணக்குப் போடக் கற்பிப் பவரும்
பூகோள சாத்திரம் புகட்டு வோரும்
விஞ்ஞான அறிவை விளக்கு பவரும்
சரித்திரம் சொல்லித் தருகிற பேரும்
சித்திரம் வரையச் செய்கிற வாத்தியும்
தேகப் பயிற்சி 'ட்ரில்மாஸ்டர்' கூட,
ஓட்டமும் நடையும் உருட்டும் மிரட்டுமாய்க்
கண்டிப்பு தண்டிப்புக் கடுபிடி காட்டி
வருவார் போவார் வார்த்தைகள் பேசுவார்.
பார்த்த உடனே பயபக்தி யோடு
மாணுக்கர் அவர்களே மதித்து வணங்குவர்.
ஆனல்,
பண்டித ரிடத்தில் மாத்திரம் பயப்படார்.
வடமொழிப் பண்டிதர் வைதிக மானவர்,
அநித்திய உலகில் அசட்டை போலத்
தம்முடைக் கடமையைத் தாம்முடித் திட்டு
எவரென்ன செய்யினும் ஏனென்று கேளார் ;
அவரைப் பற்றிநான் அதற்குமேல் அறியேன்.
தமிழ்மொழிப் பண்டிதர் தண்மையே உருவாய்,
'அடக்கம்' என்பதன் அறிகுறி யாமென
'அமைதி' என்னும் சொல்லின் அர்த்தமாய்

சாந்த மயமாய்ச் சந்தடி யின்றி
இருக்கிற இடமே தெரியா திருப்பார்.
சிறியோர் பெரும்பிழை செய்திட் டாலும்
அடிக்கவோ பிடிக்கவோ அவர்கை கூசும்.
வழுக்கியும் அவருடை வாயிலிருந்தொரு
இழுக்குடை வார்த்தை எதுவும் வராது.
சொற்பொழி வென்று சொல்ல வந்தாலும்,
'பண்டிதர்' பேச்சுப் பழங்கதை யாகவே
பத்தியைக் குறித்தும் முத்தியைப் பற்றியும்
ஞானம் என்றும் மோனம் என்றும்
அன்பைப் பற்றியும் அருளைப் பற்றியும்
சத்தியம் என்றும் சாந்தம் என்றும்
இளைஞர் காதுக்கு இன்பம் தராது.
அதனுல் தானே, என்னவோ அறியேன்,
பண்டிதர் என்ருல் பயமற்றுப் போனது!
நான்படித் திட்ட நாளில்நான் அறிந்த
பண்டிதர் அனைவர்க்கும் பான்மை இன்னதே.
இப்போது பண்டிதர் எப்படி என்றிட
அவர்களைப் பற்றிநான் சிறிதும் அறியேன்.
மற்றுள்ள மாணவர் மரியாதை குறையினும்,
பண்டிதருக்கு நான் பணிந்தே பயின்றேன்.
என்ருலும், பண்டித ரென்ருல் இளக்கமாய்
ஏளனம் செய்பவர் இடையே வளர்ந்தவன் ;
ஆகையி ஞலே, தீயஅப் பழக்கம்
எனக்கும் தெரியாமல் இருந்தது போலும்!
அப்படி யிருக்க,
உலகுக் கெல்லாம் உணவு கொடுத்து
வந்தவர்க் கெல்லாம் வடித்துக் கொட்டி

ஞானமும் ஊட்டி நல்வழி காட்டிக்
கல்வியும் கலைகளும் கற்கச் செய்து
வீரமும் தீரமும் வெற்றியும் கண்டு
அன்பின் முறைகளில் அரசு புரிந்து
சாந்தி மிகுந்த தனிச்சிறப் புள்ளதாய்,
வந்து பார்த்தவர் வாழ்த்தி வணங்கும்
நாடா வளந்திகழ் நாடா இருந்தும்
பேரும் புகழும் பெருமையும் கெட்டுத்
தன்னர சிழந்து தரித்திரம் மிஞ்ச
அன்னிய நாட்டுக் கடிமைப் பட்டு,
அறிவும் ஆற்றலும் ஆண்மையும் மறைந்து
நொந்து கிடக்கும் இந்தியத் தாயின்
சுதந்திரப் போரைத் தொடங்கிய தூயோன்,
தெய்வத் திருக்குறள் திருவாய் மலர்ந்த
வள்ளுவ முனிவனே வந்துவிட் டதுபோல்
உழவும் உழைப்புமே உயர்ந்த தொழிலாய்
வாழ்ந்து காட்டும் நவீன வள்ளுவன்,
'ஏழையின் துயரம் என்துயர்' என்போன்,
நல்லறமாகிய இல்லறத் தவசி
பக்தருக் கெல்லாம் பக்த சிகாமணி
ஐம்புலன் வென்ற அருந்தவ சித்தன்
ஞாலத் துக்கொரு ஞான ஜோதியாய்
அறந்தரு வாழ்க்கை அந்த ணாளனும்
காந்தி அடிகள்எம் கருணை மூர்த்தி—
சத்தியம் சாந்தமே கத்திகே டயமாய்க்
கொல்லா விரதமே வில்லாய் வளைத்திட்டு,
அன்பே அதற்கொரு அம்பாய்ப் பூட்டி
அறப்போர் தொடுத்தஅவ் ஆரம்ப நாளில்,

அன்னவன்
சேனையில் ஒருவனாய் யானும் சேர்ந்தேன்.
காந்தி மகானின் கருத்தைச் சொல்லிப்
பாமர மக்களின் படைப்பலம் திரட்ட
ஒவ்வொரு ஊராய் ஓடித் திரிந்து
வீடு வாசல் வேலைகள் விட்டு
அதுவே பணியாய் அலைந்த நாட்களில்—
“அயலூர் ஒன்றில் அரசியல் கூட்டம்,
பெருத்த கூட்டம் பெரிய கொண்டாட்டம்,
பட்டண மிருந்தொரு பண்டிதர் வருகிறார்,
செந்தமிழ் நடையில் தித்திக்கப் பேசுவார்,
போவோம் அதற்குப் புறப்படுங் கள்” என,
என்னையும் சிலரையும் எனக்கொரு நண்பர்
கந்த சாமியார் கனிவுடன் அழைத்தார்.
இதனைக் கேட்டார் இன்னொரு நண்பர் :
“பண்டிதர் பேச்சா ? பழைய சோறுதான்.
சளசள சளவென்று சப்பிட் டிருக்கும்.
வெண்டைக் காயும் விளக்கெண் ணெயுமாய்
வழவழ வென்றுதான் பேச்சு வளரும்.
நேற்றொரு பண்டிதர் நீளமாய்ப் பேசினார்.
போதும் போதும் போதுமென் றாச்சு”
என்று சொல்லி ஏளனம் செய்தார்.
என்னுடன் இருந்த ஏழெட்டுப் பேரும்
ஆங்கிலப் பள்ளியின் அனுபவ முள்ளோர்—
பண்டிதர் பேச்சைப் பரிகாசம் பண்ணிய
அந்தக் கேலியை ஆமோ தித்தனர்.
கூடச் சேர்ந்து குறைசொலா விடினும்
பண்டிதர் என்பதைப் பரிகாசம் செய்ததை

கண்டிக் காமல்நான் கம்மென் றிருந்தேன்.
சேர்ந்து கொஞ்சம் சிரித்தும் விட்டேன்.
அதனால், என்னிடம் அதிகம் மதிப்புடன்
கூவி யழைத்தவர் கோபங் கொண்டார்.
அதன்மேல் எனக்கும் அறிவு பிறந்தது.
பண்டிதர் என்றால் பரிகாசம் செய்வதைக்
கண்டனம் செய்து கனிந்து பேசிக்
கந்த சாமியின் கருத்தின் படிக்கே
எல்லாரும் சேர்ந்து போய்வர இசைந்தோம்.
போனோம்.
பண்டிதர் அவர்களைப் பார்த்தேன். பார்த்தால்,
தாட்டிகம் இல்லை, தடபுடல் காணோம்!
உயரமும் இல்லை, உருவமும் ஒல்லி.
கறுப்பு நிறமெனக் கணிக்கத் தகுந்தவர்.
கல்வித் தெய்வம் கலைமகள் வண்ணமாய்
வெள்ளை வெளேரென வெளுத்த வேட்டியும்
அதனிலும் வெளுத்த அங்கச் சட்டையும்
அங்கியின் மேலொரு அங்க வஸ்திரமும்,
தலையில் துல்லிய வெள்ளைத் தலைப்பா
கண்ணாடி மூடிய கனற்பொறி போன்று
குளிர்ச்சியும் கூடிய கூர்ந்த கண்கள்.
மகிழ்ச்சி ஊட்டும் மலர்ந்த முகத்துடன்
'பண்டித' ராகவே பண்டிதர் இருந்தார்.
இடதுகை விரல்கள் இரண்டை நீட்டி,
கருத்துக் கேற்பக் கையை ஆட்டி
வலதுகைத் தலத்தில் அடித்து வைத்து
சங்கீத மத்தியில் சாப்புப் போல
அடித்துப் பேசி அழுத்தம் திருத்தமாய்ச்

சுளைசுளை யாகச் சொற்களைச் சொல்லிப்
பதம்பத மாகப் பதியும் படிக்கு
அணிஅணி யாக அடுக்கிய கருத்தொடு,
இயக்கி விட்டதோர் எந்திரம் போலத்
தங்கு தடையெனல் எங்குமில் லாமல்
எத்தனைத் தூரம் எட்ட நின்றாலும்
கணீர்கணீ ரென்னக் காதிலே விழும்படி
செவிவழி இனிக்கும் செந்தேன் போலக்
கற்பனை மிகுந்த கவினுடைக் கவிதையாய்க்
காதாற் காணும் கனவே போல
தொல்காப் பியத்தின் சூத்திரம் தொடரச்
சங்க நூல்களின் சாறு வடித்துச்
சிலப்பதி கார ஒலிப்பும் சேர்த்துத்
திருக்குறள் ஞானப் பெருக்கம் திகழத்
திருமந் திரத்தின் பெருமை திரட்டிக்
கம்பன் பாட்டின் செம்பொருள் பெய்து
தேவா ரத்தின் திருவருள் கூட்டித்
திருவா சகத்தின் தேன்சுவை நிறைத்துத்
திருவாய் மொழியின் தெளிவையும் ஊட்டி
எம்மத மாயினும் சம்மதம் என்னும்
சமரச சுத்தசன் மார்க்கம் தழுவிப்
பண்டைய அறிவைப் புதுமையிற் பதித்துப்
பண்டிதர் எவரிடம் பார்த்தறி யாத
அரசியல் சரித்திர அறிவுகள் பொருத்திக்
கள்ளமில் லாத உள்ளத் தெளிவுடன்
அன்பு ததும்பிட ஆர்வம் பொங்க,
கற்றவர் மனத்தை முற்றிலும் கவர்ந்து
பாமர மக்களைப் பரவசப் படுத்தி,

'காந்தி யத்தின் கருத்துக்கள் எல்லாம்
தமிழன் இதயம் தழுவிய வாழ்வே'
என்பதைத் தெளிவாய் எடுத்துக் காட்டிய
அற்புதம் மிகுந்த சொற்பொழி வதனைக்
கேட்டேன் : இன்பக் கிறுகிறுப் புற்றேன்.
இரண்டரை மணியும் இப்படிப் பேசிக்
கடைசியில் பேச்சின் கருத்துரை யாக,
முறைபிற ழாமல் உரைதள ராமல்
சொன்னதை யெல்லாம் சுருக்கிச் சொல்லி
இறைத்த முத்தை எடுத்துச் சேர்த்துத்
தொடுத்த மாலைபோல் தொகுத்துக் கூறிக்
கேட்டவர் நெஞ்சில் கிடந்து புரளக்
கூப்பிய கையுடன் குனிந்து கொடுத்து
உரையை முடித்து உட்கார்ந்து விட்டார்.
சொப்பன இன்பத் தொடர்ச்சி நிற்கவே,
திடுக்குற விழித்துத் திகைப்பவன் போலும்,
சங்கீதம் மத்தியில் தடைப்பட்டதுபோல்,
ஓடின சினிமா ஒளிப்படம் கேடுற்று
இடையே அறுந்து இருட்டடித் ததுபோல்
என்னுடை உணர்ச்சிகள் இடைமுறிந் தேங்கினேன்.
இன்னுன் எனவென ஏதும் அறியாப்
பண்டிதர் அவரையே பார்த்துப் பார்த்துப்
புருடனைக் கண்ட புதுப்பெண் போல—
அன்போ ஆசையோ அடக்கமோ ஒடுக்கமோ
அச்சமோ நாணமோ மடமையோ அறியேன்—
என்னையும் மறந்து என்னுடை மனது
பண்டிதர் இடத்தில் படிந்து விட்டது.
இன்பத் தமிழ்மொழி இலக்கியம் சொல்வதே

காந்தி யத்தின் கருத்துக்கள் என்பதை
என்னைப் போலவே எண்ணிய பண்டிதர்
என்னிலும் அழகாய் இணைத்துச் சொன்னதை
எண்ணிக் கொண்டே தலைகுனிந் திருந்தேன்.
சிறிது நேரம் சிந்தனை செய்தபின்,
பண்டிதர் அவர்களைப் பார்க்கும் ஆசையால்
மீண்டும் நிமிர்ந்து மேடையைப் பார்த்தேன்.
அந்தப் பண்டிதர் அங்கே இல்லை.
எவரோ பேசுதற்கு எழுந்து நின்றார்.
"எங்கே? பண்டிதர் எங்கே?" என்றுநான்
பக்கத்தி லிருந்த பலரையும் கேட்டேன்.
"பிறிதொரு ஊரிற் பேசுதற் கென்று
அவசர மாக அவர்போய் விட்டார்"
என்றொரு நண்பர் என்னிடம் சொன்னார்.
கூட்டம் முடிந்தபின் கொஞ்சிக் குலவிக்
கலந்து பேசிக் களிப்பெலாம் சொல்லிப்
பண்டித ரோடு பழக நினைத்தஎன்
ஆசை கெட்டதால், அவதி மிகுந்து
மற்றவர் பேச்சில் மனங்கொள் ளாமல்
உடனே புறப்பட்டு ஊருக்கு வந்தேன்.
கண்ட பண்டிதர் கண்ணி லிருந்தார்.
கேட்ட பேச்சும் நெஞ்சில் கிளர்ந்தது.
அந்தப் பண்டிதர் அவரே அவர்தாம்
கலியாண சுந்தர முதலியார் காண்க.
அவரை முதல்முதல் பார்த்தது அப்படி.
அந்நாள் தொட்டு இந்நாள் அளவும்
என்றுடை நினைவில் என்றும் நின்றுளார்.
என்னும் போதெலாம் இன்பம் ஊறும்.

நினைக்கும் பொழுதெலாம் நெஞ்சம் குளிரும்.

.........................................

பத்து ஆண்டுகள் பறந்தபிற்பாடு
பட்டணம் சென்றுதான் நேரிற் பழகினேன்.
அதன்மத் தியிலே அவரும் நானும்
கடிதத் திலேதான் கலந்து மகிழ்ந்தோம்.
என்னுடைப் பாட்டென எதுபோ னாலும்
'தேசபக்தன்' தினசரி அதனிலும்
'நவசக்தி' தன்னிலும் நன்ருய் அமைத்துச்
சிறப்புடன் வெளிவரச் செய்வரச் செம்மல்.
பக்கத்தில் அவருடன் பழகிய போதுதான்
சீலம் நிறைந்த செம்மனக் குன்று
ஒழுக்கம் உயர்ந்த உத்தம சீலர்
முதலியார் பெருமையை முற்றிலும் அறிந்தேன்.
தமிழ்நாடு தந்த தலைவர்கள் தம்முள்
காந்தி யத்தின் உட்பொருள் கண்ட
சிலருள் மிகவும் சிறப்பு வாய்ந்தவர்
முதலியார் என்பது முற்றிலும் உண்மை.
'தேசபக்த'னில் அவர் செய்த சேவையும்
'நவசக்தி' மூலமாய் நாட்டிற் குழைத்ததும்
புகழ்ந்தால் அதுபெரும் புத்தக மாகும்.
தமிழிலே எண்ணித் தமிழிலே பேசித்
தமிழிலே எழுதித் தமிழுக் காகவும்
தமிழருக் காகவும் தனித்தொண் டாற்றுவார்.
சந்தி விகாரச் சந்திடைச் சிக்கிய
வழக்கற்றுப் போன வார்த்தைகள் மலியப்
'பழந்தமிழ்' என்று பலபேர் பேசின
அந்தத் தமிழையும் அழகுறச் செய்து

புத்தம் புதுப்பல சொற்ருெடர் புகுத்திக்
கேட்கக் கேட்கக் கிளர்ச்சி யுண்டாக்கும்
தனியொரு தமிழ்நடை தந்தவர் சுந்தரர்.
இந்தியத் தாயின் விடுதலே எண்ணமே
நிறைந்த அவருடை நெஞ்சம் குமுற,
காந்தி யத்தையே கடைப்பிடித் தவராய்ச்
சாது வாகவே தம்கடன் தாங்கி
அச்சுத் தொழிலிலும் அச்சாணி போலவே
கண்ணிற் படாமல் கடமையைச் செய்து
பழமையும் புதுமையும் படியும் சந்தியாய்
பாட்டாளி மக்களின் பக்கத் துணையாய்
பெண் குலப் பெருமைக்குப் பெருத்த காவலாய்
சைவ நெறிக்கொரு சமரசத் தூதனுய்
பட்டணத் திருந்தும் பகட்டில் லாமல்
ஓசையில் லாமல் ஒய்வற உழைக்கிருர்,
முத்தமிழ்க் கலியாண சுந்தர முதலியார்.
அவருடை அறுபதாம் ஆண்டு நிறைவைப்
பரவிப் புகழ்ந்து பல்லாண்டு பாடி,
நலம் குறையாமல் இன்னமும் நாற்பது
ஆண்டுகளேனும் அவர்வாழ்ந் திருக்கச்
சிவத்தைக் கோரித் தவத்தைச் செய்வோம்.
நந்தமிழ் மக்கள் நல்வாழ்வு பெறவே,
வாழி கல்யாண சுந்தரன் வாழி!
வாழிபல் லூழி வாழி வாழியவே!

# தீபாவளி

தீபாவளி யெனும் திருநாளே
　　தெய்வம் அன்பென வருநாளாம்.
கோபா வளிகளைக் கொளுத்திடும் நாள்.
　　கொஞ்சிக் குலவிக் களித்திடும் நாள்.

தனித்தனி வீட்டின் தரை மெழுகி
　　தரித்திரப் பீடையைத் தலைமுழுகி
மனத்துயர் யாவையும் மறந்திடுவோம்.
　　மகிழ் வுடன் உள்ளதை விருந்திடுவோம்.

உதவாப் பழசாம் வழக்க மெல்லாம்
　　உதறித்தள்ளுதல் ஒழுக்கமென
புதிதாம் ஆடைகள் புனைந்திடுவோம்.
　　புதுப்புது வழிகளில் நினைந்திடுவோம்.

கட்சிச் சண்டைகள் பட்டாசைக்
　　கட்டுக்கட்டாய் சுட்டே பின்
பட்சம் வந்த மனத் துடனே
　　பழகுவம் எல்லா இனத்துடனும்.

ஒவ்வொரு வீட்டிலும் பலகாரம்
　　ஒருவருக் கொருவர் உபகாரம்
இவ்வித வாழ்வே தினந் தோறும்
　　இருந்திட வேண்டிநம் மனம்கோரும்.

ஈயாப் பத்தரும் ஈந்திடும் நாள்.
        ஏங்கிடும் அடிமையும் ஓய்ந்திடும் நாள்.
நோயால் நொந்து இளைத்த வரும்
        நோன்பெனக் கொஞ்சம் செழித்திடுவார்.

'ஐயா பசி' யென் பாரில்லை
        'அப்புறம் வா' யென் போரில்லை.
மெய்யே அன்பு மிகுந்திடும் நாள்.
        வேற்றுமை விட்டு மகிழ்ந்திடும் நாள்.

மாச்சரி யங்களும் மறைந்திடும் நாள்.
        மனிதன் இயல்பு சிறந்திடும் நாள்.
ஆச்சரியம் போல் எல்லாரும்
        ஆடலும் பாடலும் சல்லாபம்.

# இன்பப் பொங்கல்

பொங்கல் எனும் பொழுதில்—இன்பம்
பொங்குது துன்பங்கள் மங்கி மறைந்திடும்
மங்களச் சொல் அதிலோர்—தெய்வ
மந்திரம் உண்டென சிந்தை களித்திட
எங்கள் தமிழ்நாட்டில்—மிக்க
ஏழையும் செல்வரும் தோழமை எய்திடும்
இங்கிதம் கண்டிடும் நாள்!—பலர்
எங்கும் புகழ்ந்திட உங்கள் குடித்தனம்
பொங்குக பொங்குக பால்!

வெள்ளை அடித்திடுவோம்—எங்கள்
வீடுகள் வாசலில் கூடிய மாசுகள்
அள்ளி எறிந்து விட்டு—வெகு
அற்புதச் சித்திரம் பற்பல வர்ணங்கள்
புள்ளிகள் கோலமிட்டு—தெய்வ
பூசனைத் தீபங்கள் வாசனைத் தூபங்கள்
உள்ளத் திலும் புகுந்து—அங்கே
ஊறிய தீமைகள் மாறுதல் செய்திடும்
சீருடைப் பொங்கலிதாம்!

மாடுகள் நாய் குதிரை—ஆடும்
மக்களைப் போலவே ஒக்கும் உயிரென்று
நாடும் நினைவு வந்து—பொங்கல்
நாளில் அவைகளின் தாளில் தலையின்றி

தேடும் உரிமை தந்து—முற்றும்
தேய்த்துக் குளிப்பாட்டி நேர்த்தி யுறமலர்
சூடின தாகச் செய்வோம்—அதில்
தோன்றும் கருணையை ஊன்றி நினைத்திட
என்றது இந்தப் பொங்கல்!

அஞ்சும் மனத்தவரும்—கொஞ்சம்
ஆண்மை தரும்மனப் பான்மை யடைந்திட
மஞ்சு விரட்டிடுவோம்—துஷ்ட
மாட்டையும் அடக்கும் தாட்டிகம் காட்டுவம்
வஞ்சனை மோசங்களும்—தங்கள்
வாடிக்கை விட்டந்த வேடிக்கை பார்த்துடன்
கொஞ்சி மகிழ்ந்திடும் நாள்!—மைந்தர்
கூட்டமும் பந்தய ஓட்டமும் மங்களப்
பாட்டும் மிகுந்த பொங்கல்!

மங்கள வாழ்வு பெற்று—மக்கள்
மாச்ச ரியம்தரும் ஏச்சு களைவிட்டு
எங்கள் திரு நாட்டில்—இனி
ஏழ்மையும் யாருக்கும் தாழ்மையும் நீங்கிட
செங்கை சிரங்கூப்பி—தெய்வ
சிந்தனை யிற்பல வந்தனை பாடிஇப்
பொங்கலை வாழ்த்திடுவோம்—இந்த
பூதலம் யுத்தத்தின் வேதனையாற் படும்
தீதறப் பொங்குக பால்!

# வாழிய பொங்கல்

பழையன கழியப் புதியன மலிய
தழைத்துப் பூத்து தருமம் கனிந்து
விழவுகள் பாடி விருந்தொடும் உண்டு
முழவொலி மனைதொறும் முழங்கிடும் பொங்கல்!

சத்தியம் நிலவ சாந்தமே குலவ
உத்தம போதனை ஒப்பிலாச் சமரசம்
இத்தரை முழுதும் எங்கணும் பரவ
பக்தியில் பரமனைத் தொழுதிடப் பொங்கல்!

யுத்தமே என்னும் ஒருபெரும் பேச்சால்
இத்தினம் எங்கும் யாவரும் ஏங்கி
பித்தரே யாகிப் பேதுறும் நிலையை
சற்றுநாம் மறக்கச் சாந்தியாம் பொங்கல்!

நினைவுகள் சிறந்து நிதிபல நிறைந்து
சினவகை சேர்ந்த சிறுமைகள் தீர்ந்து
மனைதொறும் மனைதொறும் மங்களம் தங்க
அனைவரும் இன்புறும் அன்பே பொங்கல்!

ஏழையென் றெவரும் ஏங்குதல் நீங்கி
மேழியின் சிறப்பில் செங்கோல் மின்னும்
வாழ்வினைக் காட்ட வருவதே பொங்கல்
வாழிய பொங்கல்! வாழிய உலகம்.

# கம்பன் திருநாள்

கம்பன் திருநாள் கொண்டாடி
கவிதா தேவியின் அருள்கூடி
அன்பின் வாழ்க்கையைக் கடைப்பிடிப்போம்
அனைவரும் இன்புறும் படிநடப்போம்.

கற்றவர்க் கெல்லாம் பொதுவாகும்
கம்பன் திருநாள் இதுவாகும்
மற்றுள பற்பல நாட்டாரும்
மதித்துளம் மகிழ்ந்திடும் பாட்டாகும்.

தமிழ்மொழி தனக்கொரு தவச்சிறப்பை
தந்தது கம்பனின் கவிச்சிறப்பே
'அமிழ்தம் தமிழ்மொழி' என்பதுவும்
அழியா திருப்பது கம்பனதாம்.

கம்பனை மறந்தால் தமிழ்எது?
கவிதை என்பதும் கமழாது
அம்புவிக் கவிஞருள் அரசாகும்
அவனே தமிழ்மொழிப் பரிசாகும்.

கற்பனை சிறந்தது கம்பன் சொல்
கலைத்திறம் நிறைந்தது கம்பன் சொல்
அற்புத சித்திரம் அவன் பாட்டு
அறிவுக் கினிப்பது அவன் பாட்டு.

சத்தியம் மிளிர்வது கம்பன் சொல்
சாந்தியைத் தருவது கம்பன் சொல்
நித்தியம் பெற்றது அவன் வாக்கு
நிந்தனை அற்றது அவன் வாக்கு.

இயல்பாம் வழிகளில் கதைபேசி
இசைமிகும் மொழிகளில் கவிவீசி
நயமிகும் நாடகம் நடப்பதுபோல்
நாவலர் வியந்திடத் தொடுப்பவனும்.

கலைமொழி நயங்களைக் காட்டிடவும்
கல்வியின் தெளிவினை ஊட்டிடவும்
நிலைதரும் ஊற்றெனத் தமிழ்நாட்டில்
நின்றிடும் கம்பன் அரும்பாட்டு.

'கன்னித் தமிழ்' எனும் பெருமை யெலாம்
கம்பன் கவிதையின் அருமையினால்
இன்னொரு கம்பனும் வருவானோ !
இப்படி யும்கவி தருவானோ ?

துயரம் நேர்ந்திடில் துணையாகும்
துன்பம் நீந்திடப் புணையாகும்
அயர்வெனும் வேலையில் அலுப்பகற்றும்
அச்சம் நீங்கிட வலுப்படுத்தும்.

குணங்களில் உயர்ந்திட நலங்கொடுக்கும்
கொடுமையை எதிர்த்திடப் பலங்கொடுக்கும்
வணங்கிய வாயுரை மொழிகூட்டும்
வாழ்க்கையின் பயன்பெற வழிகாட்டும்.

ஜாதியை மதங்களை மறந்திடவும்
சமரச உணர்ச்சிகள் நிறைந்திடவும்
நீதியை அறங்களை நினைப்பூட்ட
நிரந்தரக் களஞ்சியம் அவன் பாட்டு.

பண்டிதர் புகழ்ந்திடல் போதாது
பாமரர் மகிழ்ந்திடத் தோதாக
பெண்டிரும் பிள்ளையும் அதைப்படித்து
பெருமைகள் அடைந்திடும் விதம் கொடுத்து

ஆராய்ச் சிகளால் மயங்காமல்
அவைதரும் சண்டையில் தயங்காமல்
நேராய்க் கம்பனைப் படிப்பவரே
நிச்சயம் கவிரசம் குடிப்பவராம்.

திருநாள் நடப்புடன் நில்லாமல்
தினந்தினம் படித்திட எல்லாரும்
வருநாள் கண்டு களித்திடவே
வாழிய தமிழுக் குழைத்திடுவோம்.

# கலை

“வியப்புற இன்பம் விருப்புற விளைக்கும்
காரியத் திறமையே ‘கலை’ எனப் படுவது.
இன்பம் தருகிற எல்லாச் செய்கையும்
கலையின் இனமாய்க் கருதத் தக்கதே.
இன்பம் என்பதில் இரண்டு விதங்கள்
இயற்கை இன்பமும் செயற்கை இன்பமும்.
இயற்கை இன்பம் ஈடற்ற தெனினும்
செயற்கை இன்பமே சிறப்பென எண்ணி
மகிழ்வது மாநில மக்களின் இயல்பு.
கண்ணுற் காணும் இயற்கைக் காட்சியை
சித்திரம் வரைந்து சிறப்பென எண்ணுவர்,
உயிருடன் பார்க்கும் ஒருவரின் உருவை
சிற்பச் சிலையில் சீராட் டுவார்கள்,
ஊக்கமும் உணர்ச்சியும் ஊட்டும் சொற்களை
ப்பாட்டாய்க் கேட்கவே பலரும் விரும்புவர்.
மணமிக்க மலர்கள் மடியில் இருப்பினும்
அவற்றின் அத்தரின் ஆசையே அதிகம்.
எலுமிச் சம்பழம் இளநீர் கரும்பை
தனித்தனி அவற்றின் தன்மை கெடினும்
மூன்றும் கலந்தால் முதிர்சுவை என்பர்.
இன்பம் தருகிற இயற்கை நிகழ்ச்சிகள்
அநேகம் உள்ளன. ஆயினும் அவைகள்
வேண்டிய போதுநாம் விரும்பும் விதத்தில்
அகப்படமாட்டா அதற்கோர் உதாரணம்.

காதில் விழுந்ததும் களிக்கச் செய்கிற
ஓசைகள் அநேகம் இயற்கையில் உண்டு.
ஆனால் அவைகள் நேர்வது அருமை.
அதனால் அல்லவா அப்படி ஓசையை
வாய்ப் பாட்டென்றும் வாத்திய மாகவும்
சமைத்துக் கொடுக்கும் சங்கி தத்தைஓர்
உயர்ந்த கலையென உலகம் கொள்வது?
இப்படி யேபிற எல்லா இன்பமும்
செய்யத் தெரிந்த திறமையே 'கலை'யாம்.
கலைகளின் இன்பம் புலன்களைக் கவர்ந்து
ஒழுக்கக் கேட்டையும் உண்டாக்கும் அதனால்
தமிழன் கலையெனத் தந்தன யாவும்
அறங்களைப் போற்றும், அறிவையே நாடும்.
வேடிக்கை என்றும் விநோதம் என்றும்
அநேக கலைகளைத் தமிழன் அறிவான்
ஆயினும் அவைகளும் அறத்தையே அடுக்கும்.
நூல்களை எழுதும் கலையின் நோக்கமும்
கற்பனைக் கதையின் கலையும் அறமே.
தருமம் பேசாத் தமிழ்நூல் கலையை
இலக்கிய மாகவே எண்ணான் தமிழன்.
கலைகளின் வழியே கருணையைப் புகட்டல்
எளிதாம் எனநம் முன்னோர் எண்ணியே
கண்ணும் கருத்துமாய்க் கலைகளைக் காத்து
இயலென எழுதியும் இசையெனப் பாடியும்
கற்பனை நிறைந்த கவிதைகள் செய்தும்
நாட்டியம் பயின்றும் நாடகம் நடித்தும்
குளங்களை வெட்டியும் கோபுரம் கட்டியும்
சிலைகளைச் செதுக்கிச் சித்திரம் வரைந்தும்

மலைகளைக் குடைந்து மண்டபம் ஆக்கியும்
கலைகளை வளர்த்த காரணம் எல்லாம்
செயற்கை இன்பமும் இயற்கையில் சேர்ந்து
அறிவைத் துலக்கி அன்பைப் பெருக்கி
சச்சர வில்லாச் சமுதாய வாழ்வை
உண்டாக்கி வைத்தல் ஒன்றே நோக்கம்.
புலன்களுக் கெட்டாப் பொருளாம் இறைவனை
புலன்களுக் கின்பம் புகட்டவே புரியும்
கலைகளின் மூலமாய்க் கருதலாம் என்றே
கடவுளின் நினைப்பே கலைகளில் கலந்திடப்
பழகிய பெருமையே தமிழ்க் கலைப் பண்பு.

# அன்பு

“ துறவிக்கு மட்டுமா அன்பின் தொடர்பு
இல்லறம் முற்றிலும் அன்பின் இயக்கமே
அன்பின் திறங்களை யாரே அறிவார் !
அன்பின் சிறுமையே ஆசை என்பது
அன்பின் பெருமைதான் காதல் ஆவதும்.
அன்பின் விகாரமே காமமாய் அலர்வது.
அன்பின் விரிவுதான் அருளாய் மலர்வது.
மனைவியும் மக்களும் மற்றுள சுற்றமும்
நண்பரும் என்பதாய் நம்மையே நாடும்
பற்றுள் ளவரிடம் பட்சமே அன்பாம்.
பற்றிலா எவர்க்கும் பற்றுவிட் டவர்க்கும்
பகைமையே நம்மிடம் பாராட்டு வோர்க்கும்
அன்பே செய்வதாம் அருள்எனப்படுவது.
துறவறம் அருள்செயத் துணைதரும் எனினும்
இல்லற வாழ்விலும் அருளோ டிருப்பதே
ஆன்றோர் வகுத்த அறநெறிப் பொருளாம்.
அன்பின் ஒழுக்கமே இல்லறம் ஆவது.
அன்பிற் பெருக்கிய அருள்சேர் வாழ்க்கையே
துறவறம் என்பதன் துவக்கம் என்பது.
அன்பைப் போன்ற அரும்பெரும் செல்வம்
மனிதன் பெறுவது மற்றெதும் இல்லை.
அறிந்தவர்க் கெல்லாம் அன்பே தெய்வம்
அன்பை உணர்வதே ஆனந்தம் எனக்கு ”

# ஆண்மை

அஞ்சாத நிலையே ஆண்மை
அஞ்சினோர்க் கருளல் ஆண்மை
கெஞ்சாத வாழ்வே ஆண்மை
கெஞ்சினோர்க் கிரங்கல் ஆண்மை
மிஞ்சாத கோபம் ஆண்மை
மிஞ்சினால் காத்தல் ஆண்மை
துஞ்சாத ஊக்கம் ஆண்மை
துன்பத்தில் துணையாம் ஆண்மை.

பொய்யாத நிலையே ஆண்மை
புகுந்தாருக் கபயம் ஆண்மை
வையாத பேச்சே ஆண்மை
வருத்தாது இருத்தல் ஆண்மை
எய்யாத சொல்லே ஆண்மை
இகழாது இடித்தல் ஆண்மை
கொய்யாது கொடுத்தல் ஆண்மை
கோள் சொல்லாக் குணமே ஆண்மை.

உள்ளதை உரைத்தல் ஆண்மை
ஒளிப்பதை ஒழித்தல் ஆண்மை
கள்ளத்தைக் கடிதல் ஆண்மை
கயமையைக் காய்தல் ஆண்மை
எள்ளளொத்த துன்பம் கூட
எவருக்கும் இழைக்கா தாண்மை
வெள்ளத்தைப் போன்ற அன்பின்
வெற்றியே விரும்பும் ஆண்மை.

# வீரமும் தீரமும்

ஆயுதம் தாங்கி அரண்களில் மறைந்து
ஏமாந்திருக்கும் எதிரியைக் கொல்வதும்
சீவனம் செய்யச் சேனையில் சேர்ந்து
உடைகள் தரித்து நடைகள் பயின்று
எந்திரம் போல ஏவல் கேட்டு
கொடுமை புரிவதும் கொல்வதும் சாவதும்
வீரமும் அல்லதீரமும் அல்ல.
வீரமோ தீரமோ விரும்பிப் பழகும்
செயற்கை அல்ல, இயற்கை சேர்ந்தது.
வீரமும் தீரமும் வெவ்வேறு அல்ல.
இரண்டும் நெருங்கி இணைந்த குணங்கள்.
வீரம் என்பது வீட்டையும் நாட்டையும்
அக்கம் பக்கம் யாரையும் காக்கும்.
அன்போடியைந்த ஆண்மையே வீரம்.
எதிரியிடத்திலும் இரக்கமே காட்டும்.
காதல் என்பதைக் கண்ணெனப் போற்றும்.
கற்பெனும் சொல்லின் நற்பொருள் நாடும்.
நட்பெனும் பதத்தின் உட்பொருள் உணரும்.
துன்பம் என்றால் துணைசெயத் துடிக்கும்.
வஞ்சனை செய்து வாழ்வதை வெறுக்கும்.
பொய்யுரை பேசும் புன்மையில்லாதது.
நடுநிலை விட்ட நலங்களைத் துறக்கும்.
ஹிம்சையால் வருகிற இன்பம் இகழும்.
உடலை வளர்க்க ஊறு செய்யாது.

உயிரையும் கொடுத்து உதவிகள் புரியும்.
பிறர் குறை பேசிப்பிழைக்க எண்ணுது.
சிறுமை எதையும் சீறித் தள்ளும்.
இனிய சொற்களே இயல்பாய்ப் பேசும்.
பொன்னே வரினும் புறஞ் சொல்லாது.
கொள்கை விடாமல் கொடுமை சகிக்கும்.
தன்னலச் செலவில் பிறநலம் தாங்கும்.
நீதி இல்லாத வழிகளை நீக்கிய
வெற்றி விருப்பமே வீரம் என்பது.
தீரம்என்பது தெய்வீக வீரம்.
உலகம் முழுதையும் ஒன்ருய்க் கருதி
விருப்பு வெறுப்பு விகாரம் விலக்கி
சாந்தம் என்பதன் சாரம் சேர்ந்தது.
கொல்லா விரதமே கொள்கையாக் கொண்டு
கொல்லப் படினும் கொலைபுரியாத
தெளிந்த வீரமே தீரம் என்பதாம்.
மகாத்து மாக்களே தீரமரபினர்
விவே கானந்தரை வீரம் என்ருல்
இராமகிருஷ்ணரை தீரம் எனலாம்."

# சொல்லின் பெருமை

பேச்சழிந்து போனால்—அறிவின்
பெருமை என்ன வாகும்?
மூச்சி முக்குமானால்—தேகம்
முன்னிருந்த தாமோ?
கூச்சமில்லை யென்றால்—பெண்மை
குறைவு பட்டதன்றோ?
நீச்ச மற்ற மீன் போல்—சமூகம்
நிலைகு லைந்து போகும்.

சொன்ன சொல்லழிந்தால்—வாழ்க்கை
சுகமிலாத தாகும்
சின்ன ஏழைக்கேனும்—சொல்லே
ஜீவ நாடியாகும்
மன்னரான பேரும்—பேச்சை
மாறிமீறி விட்டால்
சின்னபின்ன மாவார்—அதிலே
சிறிதும் ஐயமில்லை.

வாக்க ழிந்து விட்டால்—பின்னர்
வாழ்வு தாழ் வதாகும்
மூக்கறுந்து போனால்—நல்ல
முகவிலாச மெங்கே?
நோக்கி லாது போனால்—கண்கள்
நோகும் புண் களாகும்.
காக்க வேணும் சொல்லை—அதுவே
கர்ம வீரமாகும்.

வார்த்தை மாறி விட்டால்—மனிதன்
வாசம் அற்ற மலரே
கீர்த்தி யென்ப தெல்லாம்—சொல்லில்
கெட்ட பேருக் கேது?
பூர்த்தி தவறினாலும்—வாக்கில்
புரட்டு செய்தி டாமை
நேர்த்தி யானதாகும்—என்று
நினைவில் வைக்க வேணும்.

# மக்கட்பேறு

பணமிருந்தாலும் பவிசிருந்தாலும்
குணமிருந்தாலும் குலமிருந்தாலும்
பட்டம் பதவிகள் பல இருந்தாலும்
சட்டம் பேசும் சமர்த்திருந்தாலும்
எட்டும் பகையை எதிர்த்து வென்றிடத்
திட்டம் போடத் திறமிருந்தாலும்
என்னதான் மற்ற எது இருந்தாலும்
தன்னதாம் என்று தழுவிக் கொள்ளஓர்
குழந்தை இல்லாமல் கோயில் குளங்களில்
விழுந்து விழுந்து வேண்டுதல் செய்வார்.
காசி ராமேஸ்வரம் காலால் நடப்பார்.
ஜோசியன் வைத்தியன் சொன்னதைச் செய்வார்.
மந்திரம் ஜெபிப்பார் பிடைகள் மாற்றும்
எந்திரங் கட்டுவார் எதையும் செய்வார்.
எல்லாம் செய்தும் குழந்தை யில்லாமல்
பொல்லா விதியெனப் புலம்புவார் புவியில்.
சொத்துச் சுகங்களைத் தொடர்ந்திட வென்று
தத்துக் காயினும் தமக்கொரு மகவை
வாங்கி வளர்த்து வருத்தம் குறைந்து
ஏங்கிய மனதிற்கு இன்பமாய் எண்ணுவார்.

.........................................

கூனோ குருடோ கோரம் குரூபமோ
மொண்டியோ முடமோ முழுதும் செவிடோ
கருப்போ சிவப்போ களிமண் மூளையோ

குணமோ குரங்கோ குட்டிச் சுவரோ
ஆணோ பெண்ணோ அலியோஎனினும்
குழந்தை பெற்றிட எவரும் கோருவார்.

..............................................................

தான் பெற்ற தெனினும் தன தல்ல வாயினும்
எத்தனைக் குழந்தைகள் பெற்றவர் எனினும்
'குழந்தை' என்றாலே உள்ளம் குளிர்வார்.
'சிசு' எனில் எவர்க்கும் சித்தம் இரங்கும்.
'பிள்ளை'என் றிட்டால் பேயும் தாயாம்.
'பாலகர்' என்றால் பாவியும் பரியும்.
'மகவு' என்றிட்டால் மடைரும் மகிழ்வார்.
குழந்தையைக் கண்டால் கோபம் குறையும்.
சிசுவைப் பார்த்தால் தீமைகள் மறையும்.
பிள்ளையின் முன்னால் பிரியமே பிறக்கும்.
'பாலகர்' முன்னால் பகைமையும் பறக்கும்.
'மகவின்' எதிரே கல் மனம் மாறும்.

# தாலாட்டு

[அதிர்ஷ்டவசமாகக் 'காவேரி'யில் கிடைத்த குழந்தையை ஒரு படகோட்டியின் மனைவி தாலாட்டுதல்.]

ஆராரோ ! ஆரிரரோ !
அம்மா ! நீ கண்ணுறங்கு
பேரேதோ ! ஊரெதுவோ !
பெற்றவர்கள் யாரெவரோ !
சீராரும் காவேரி
தேவி திருவருளால்
வாராமல் வந்துதித்த
மாமணியே கண்ணுறங்கு.

ஆழக் கரைபுரளும்
காவேரி ஆற்றருகே
ஏழைப் படகோட்டி
என்கணவன் ஆனாலும்
கூழைக் குடித்துறங்கும்
குடித்தனந்தான் என்றாலும்
கோழைகள் அல்லவம்மா
குறைச்சல் உனக்கேதுமில்லை.

நாளைக் கணக்கெண்ணி
நல்ல நல்ல சம்பளத்தில்
ஆளை மிரட்டுகின்ற
அதிகாரம் இல்லையம்மா.
வேளை பொழுதில்லாமல்
வேலை செய்யும் ஜீவனந்தான்
காளி குலதெய்வம்
காத்திடுவாள் கண்ணுறங்காய்.

அதிகாரம் என்று சொல்லி
அநியாயம் செய்தறியோம்
சதிகாரத் தந்திரத்தால்
சம்பாதித் துண்பதில்லை.
துதிபாடிப் பொய்பேசி
சுகித்திருக்கும் சூதறியோம்.
கதி கேடுவந்துவிடக்
காரணங்கள் இல்லையம்மா.

வாது வழக்கறியோம்
வம்புதும்பு செய்தறியோம்,
சூது புரிந்தறியோம்
பொய் சாட்சி சொன்னதில்லை.
நீதி நெறிதவறி
நிந்தை சொல்ல நின்றதில்லை
ஏதும்ஒரு கெடுதி
இங்குவர ஞாயமில்லை.

வேலையின்றிக் கூலிகொள்ளும்
வித்தைகளைக் கற்றறியோம்
கூலியின்றி வேலைகொள்ளும்
கொடும்பாவம் செய்தறியோம்
காலையென்றும் மாலையென்றும்
காலமின்றிப் பாடுபட்டு
நாலு பணம் வந்தாலும்
நல்லசுகம் செய்து வைப்போம்.

தேடிப் புதைத்து வைத்து
வயிருறத் தின்னமல்
வாடிப் பசித்து நொந்து
வந்தவரை நிந்தை சொல்லி
ஓடி ஒளிந்து கொள்ளும்
உலுத்தரல்ல நாங்களம்மா
நாடிஒரு தீம்புவர
ஞாயமில்லை இவ்விடத்தே.

கோபம் மிகுந்தாலும்
குத்துச்சண்டை வந்தாலும்
பாவம் பழிகளுக்கு
பயந்தொதுங்கும் எங்களுக்கு
சிவன் இருக்குமட்டும்
தேகம் உதவும் அம்மா
தேவி துணையிருப்பாள்
தெள்ளமுதே கண்ணுறங்கு.

பள்ளிப் படிப்பறியோம்
பட்டணத்துப் பேச்சறியோம்
வெள்ளைத் துணியறியோம்
விண்பிலுக்குச் செய்தறியோம்
கள்ளப் பிழைப் பறியோம்
காவேரி சாட்சியம்மா
உள்ளபடி இங்குனக்கு
ஒருகுறையும் இல்லை யம்மா.

# காவேரிக்கும்மி

ஆடிப் பதினெட்டுப் பண்டிகை காவேரி
ஆற்றினைப் பூசித்துப் போற்றிடு வோம்.
கூடிப் பணிந்து குலதெய்வம் காத்திடக்
கும்பிடு வோமினித் துன்பமில்லை.

கடவுளை நேரில் கண்டதில்லை, அதைக்
கண்டவர் என்றவர் விண்டதில்லை.
அடைவரும் அந்தக் கடவுளும் காவேரி
ஆற்றின் பெருமையில் தோற்றுது பார்.

வெள்ளப் பெருக்கினைப் பார்க்கையிலும் அதன்
வேகத்தின் சத்தத்தைக் கேட்கையிலும்
உள்ளம் திகைத்தொரு உண்மை அறிவினை
ஊட்டுது தெய்வத்தைக் காட்டுது பார்.

ஆலமரத்தையும் வேர்பறித்து அதை
ஆட்டி உருட்டி அடித்துக் கொண்டு
காலனும் கண்டால் நடுங்க வருகின்ற
காட்சியும் யாருடை சூழ்ச்சியினால்.

காடும் மலையும் கிடுகிடுக்க அந்தக்
காட்டு மிருகங்கள் ஓட்டமிட
ஓடும் நதியிலே அத்தனை தண்ணீரை
ஊற்றுவதார் ? என்ற மாற்றம் வரும்.

ஆனை சிறுத்தைகள் அஞ்சிப் பதுங்கிட
ஆட்டையும் மாட்டை அடித்துக் கொண்டு
சேனையிலும் கடு வேகத்துடன் வரும்
சீச்கிரம் யாருடை ஆக்கினையோ !

மேட்டில் அணையென்று போட்ட சுவர்களில்
மெள்ள மெள்ள அதன் கல்லசைக்கும்
ஓட்டத்துடன் வரும் ஊட்டத்தைக் கண்டுநம்
உள்ளத்தில் எண்ணங்கள் துள்ளுது பார்.

நேற்று நடந்திட்ட மக்களின் பாதங்கள்
நீற்று நெருப்பெழக் கொப்புளித்த
ஆற்றிலே இன்றைக்கு அத்தனை தண்ணீர்
அப்படி வந்ததும் எப்படியோ !

வானத்தில்வந்து மேகம் மழையென்று
வாரி யிறைத்த தண்ணீரல்லவோ !
கானகம் சேர்மலைக் கல்லையும் உருட்டிக்
காவிரி போல் நதி ஓடுவது.

நீரின்றி மக்கள் நிலையுமுண்டோ ? அந்த
நீரைத் தருவதும் ஆறல்லவோ
ஆறென்ற நீருக்கும் மேகங்கள் ஆதாரம்
ஆகாயம் மேகத்துக் காதரவு.

ஆனதி னலந்த வானத்திலே ஒரு
அற்புத சக்தி இருக்கு மென்றே
வானத்தை யேதெய்வம் வாழும் இடமென்று
வைபகம் சொல்வதும் பொய்யல்லவே.

ஆனை கட்டியர சாண்டாலும் பல
ஆயிரம் வித்தைகள் கற்றாலும்
சேனைகட்டிப் பகை வென்றாலும் அவர்
தின்னக் கொடுப்பவள் காவேரி.

அன்னம் அளிப்பவள் காவேரி, நல்ல
ஆடை கொடுப்பவள் காவேரி.
இன்னும் மனிதர்க்கு வேண்டிய இன்பங்கள்
யாவையும் காவேரி யேதருவாள்.

விண் கொண்ட தெய்வத்தை நாமறியோம் சொல்லும்
வேதம் புராணங்கள் பார்த்தறியோம்.
கண்கண்ட தெய்வம் காவேரி நம்மைக்
காத்திடுவாள் கஞ்சி வார்த்திடுவாள்.

தாய் மொழி தெய்வத் தமிழ்மொழியாம் அதை
தந்த அகத்திய மாமுனிவன்
தூய்மைக் கமண்டல நீரென்று காவேரி
சுத்தத்தைச் சொல்லித் துதித்திடுவார்

யாருக்கு எப்படி ஆனாலும் இந்த
ஆற்றங்கரையில் வசிக்குமெங்கள்
ஏருக்கு நீர்தந்து யாருக்கும் சோறூட்டும்
எங்கள் குலதெய்வம் காவேரி.

# திட்டம் எங்கே?

தன்னுடைப் பலமும் தன்னை எதிர்க்கும்
எதிரியின் பலமும் இவ்வள வென்று
கணக்குப் போட்டுக் கூட்டிக் கழித்து
பெருக்கி வகுத்து வகுத்துப் பெருக்கி
தேர்ந்து தெளிந்து திட்டம் போட்டு
பற்பல நாட்டைப் படையெடுத்துப் போய்
அடித்துப் பிடித்து அங்குள மக்களை
சுட்டுக் கொன்று சூறை யாடிய
வெற்றி மாலை கழுத்தில் விழுமுன்
வெட்டுக் கத்தியே கழுத்தில் விழுந்திட
தன்னுடைப் படையே தன்னைக் கொல்ல
மாண்டு மறைந்த வீரரும் மன்னரும்
போட்ட திட்டம் போனதும் எங்கே?

.............................................

அன்னிய நாட்டை அடிமைப் படுத்தி
அங்குள மக்கள் சோற்றுக்கலைய
தம்முடை நாடும் தாமும் தமர்களும்
தின்று கொழுத்துச் சுகமாய்த் திரிய
அடிமைப் படுத்திய அங்குள மக்கள்
ஒன்று சேரவும் ஒட்டா விதமாய்
தனித்தனிக் கும்பலைத் தட்டிக் கொடுத்து
கொழுத்த சம்பளக் கூலி கொடுத்து
நாட்டை விற்று நல்ல சோறுண்ணக்
காட்டிக் கொடுக்கிற கயவரின் துணையால்,
குற்றங் காட்டி இடித்துக் கூறி
அறவழி காட்டும் அந்த ஞானரை,
சத்தியம் பேசும் சாதுமக்களை,
சீறி அடக்கியும் சிறையில் தள்ளியும்

உலகமும் தாங்களும் உள்ள வரையிலும்
பரம்பரையாகப் பாத்தியம் கூறி
சுகித்து வாழும் சூழ்ச்சிகள் எண்ணி
அரசியல் தந்திரம் அனைத்தையும் சேர்த்து
திட்டம் போடும் திறமை மிகுந்த
எத்தனையோ பல ஏகாதி பத்தியம்
மண்ணிற் புதைந்து மறைந்து போவதை
படித்தும் கேட்டும் பார்த்தும் வருகிறோம்
திட்டம் எங்கே? திறமையும் எங்கே?
..........................................
குடும்பச் சொத்துகள் குறையாதிருக்க
கோயில் சத்திரம் குளங்களுக்காக
தருமம் என்று சாசனம் செய்து
தன்னுடைப் பரம்பரை தன்னிலே பிறக்கும்
அவர்களே என்றும் ஆண்டு வரும்படி
பத்திரமாகப் பத்திரம் எழுதி
முத்திரையோடு முடித்து வைத்தும்
தருமம் என்றதும் தாறுமாறுகி
கள்ளிலும் சூதிலும் காம வெறியிலும்
கட்சிச் சண்டைகள் கண்ட வழக்கிலும்
அழிவதைக் கண்டு அதிகாரத்தினை
மற்றுள ஊரார் மாற்றி விடுவதும்
அல்லது அந்தச் சொத்தினை ஆளவும்
அந்தச் சந்ததி மைந்தனில்லாமல்
வேறே யாரோ விவகாரங்களைத்
தொடுத்துச் சொத்தினைத் தொடர்வதும் உண்டு
அன்றியும் அதனை அரசாங்கத்தார்
பறிமுதல் செய்வதும் பார்த்தோமதனல்

முத்திரை போட்ட பத்திரம் எங்கே ?
திறம்பட வகுத்த திட்டமும் எங்கே ?

.............................................

விஞ்ஞானத்தின் விரிந்த அறிவுடன்
இயற்கையின் விதிகளை முற்றும் இணைத்து
சக்தி சாஸ்திரம் சரியாய்ச் சேர்த்து
அணுவணுவாக அளந்து செய்து
கொஞ்சங் கூடக் குற்ற மில்லாமல்
குறித்த வேளையில் குறிதவருமல்
எண்ணிய படியே எதையும் செய்ய
பாடுபட்டுப் பண்ணி முடித்துப்
பரிட்சை பலமுறை செய்தும் பார்த்த
எந்திரப் பொறிகளில் ஏறிக் கொண்டு
எதிரியை மிகவும் எளிதிலே கொல்ல
திறமை வாய்ந்த திட்டத்துடனே
வீரம் கூறிச் சென்றிடும் வீரன்
இடையிலே தன்னுடை எந்திரம் கெட்டு
தந்திரம் விழுந்து தானும் மடிந்து
விழுந்த இடத்தையும் வேறே யாரும்
கண்டு பிடிப்பதும் கஷ்டமாய் விடுகிற
நிகழ்சிகள் எத்தனை நித்தமும் பார்த்தோம்.
எந்திரம் எங்கே ? தந்திரம் எங்கே ?
திறமை மிகுந்த திட்டமும் எங்கே ?
வருஷக் கணக்கில் வருந்தி எண்ணி
தீர்த்து முடித்துத் திட்டம் செய்யினும்
எண்ணுவ தொன்றே மனிதன் இஷ்டமாய்
காரியம் முடிக்கக் கர்த்தா அல்லவே !

.............................................

# புது வாழ்வு

பல்லவி

புதுவாழ்வு வரவேணும் வரவேணும் எங்கள்
பொதுவாழ்வு பலமுற்றுத் தரவேணும் புகழே (புது)

சரணம்

தமிழ் நாட்டின் மனைதோறும்
புதுவாழ்வு வந்து
தனியான தருமத்தின்
சுகமுற்றும் தந்து
அமிழ் தான மொழி பேசி
அகிலத்தில் காணும்
அனைவோரும் உறவாக
அது செய்ய வேணும். (புது)

நமதான இந்நாடு
நமதாக வென்றே
நாளோடு கோணாத
பணி செய்து நின்றே
சமமாக எல்லாரும்
நல் வாழ்வு பெறவே
சரியான வழிகாண
உபகாரம் அதுவாம். (புது)

புவி மீது வெகு காலம்
புகழோடு நின்றோம்
புலவர்கள் துதி பாடும்
பெருவாழ்வு கண்டோம்
தவமாதி அறமான
தரணிக்குத் தந்தோம்
தலையாய கலைவாணர்
வமிசத்தில் வந்தோம். (புது)

அவ மானம் மிகுகின்ற
அடிமைத் தனத்தால்
அநியாய சிறுமைக்குள்
அடைபட்டி ளைத்தோம்
நவ ஜீவன் அதுபெற
புது வீறு கொள்வோம்
நாமார்க்கும் குடியல்ல
எனுமாறு சொல்வோம். (புது)

அதி காலை எழுகின்ற
கதிரோன் றன் உறவால்
அலர்கின்ற மலர்போல
புதுவாழ்வு பெறுவோம்
புதிதான உணர்வோடு
உலகத்தில் எங்கும்
புலனாகும் கலையாவும்
நிலையாக இங்கும். (புது)

விதிகூட வழிவிட்டு
விலகிற்று எனவே
விதமாக விதமாக
விரிகின்ற நினைவால்
இதமாக எல்லாரும்
இனிதாக வாழ்வோம்
என்கின்ற கலை சொல்லும்
மன்றங்கள் சூழ்வோம். (புது)

மரணத்தில் அஞ்சாத
மனவீரம் வேண்டும்
மனதுக்குள் மருளாத
மதி சாந்தம் வேண்டும்
இரணத்தை எண்ணுமை
எவருக்கும் வேண்டும்
இழிவான மொழி பேசி
களியாமை வேண்டும். (புது)

திரணத்தின் அளவாக
போகங்கள் எண்ணி
தேசத்தின் பொது வாழ்வின்
சேவைகள் பண்ணும்
அரண் ஒத்த நிலையான
அறமின்னும் வளர
அறிவான புதுவாழ்வு
வரவேணும் குளிர. (புது)

அறிவோடு திறனோடு
அன்போடு கூடி
அருளோடு உறவான
புது வாழ்வை நாடி
செறிவோடு நிறைவாக
இந்நாட்டில் யாரும்
சிறுவாழ்வு இதுபோக
பெருவாழ்வு சேரும். (புது)

துறவோடு பொதுவாழ்வின்
துயர் போக மிக்க
துணிவோடு பணி செய்து
துணையாக நிற்கும்
குறியோடு புதுவாழ்வு
அதுபெற்று விட்டால்
குறையேதும் இனியில்லை
சுகமுற்று விட்டோம். (புது)

# கன்னித் தமிழ்

குமரிமலர் கொண்டு வந்தனள்—பல
கொத்துக் கொத்தாயின்பம் தந்தனள்
அமரநிலை கொண்டு துள்ளுவேன்—அந்த
ஆனந்தம் என்னென்று சொல்லுவேன் !

பொன்னும் மணியும் குறைந்தனள்—என்ற
போதும் அழகு நிறைந்தனள்
சின்னஞ் சிறிய சிரிப்பினால்—எந்தன்
சிந்தையில் இன்பம் நிரப்பினாள்.

வட்ட வடிவத் திலகமும்—புது
வண்ணம் தொடுத்த மலர்களும்
பட்டும் ஜரிகையும் இன்றியும்—தங்கப்
பாவை யெனும்படி நின்றனள்.

கன்னி அழகினைக் கண்டு நான்—சொக்கிக்
கட்டி அணைத்திட அண்டினேன்.
அன்னை யெனக் கண்டு நாணினேன்—அவள்
அடியில் விழுந்திடல் கோணினேன்

'அன்னிய எண்ணம் நிறைந்ததால்—பெற்ற
அன்னையை முற்றும் மறந்து நான்
என்ன மதி கெட்டுப் போயினேன்'—என்று
ஏங்கித் தவித்திடல் ஆயினேன்.

தேனினும் தித்திக்கும் சொல்லினுள்—என்னைத்
தேற்றி மகனெனப் புல்லினுள் ;
வானில் உயர்ந்து பறந்தவன்—போல்
வந்த வருத்தம் மறந்தனன்.

பாமர சொற்களிற் பேசினுள்—வெறும்
பண்டித வார்த்தைகள் கூசினுள் ;
ஏமுறும் ஏழையை வாழ்த்தினுள்—செல்வர்
இந்திர போகத்தைத் தாழ்த்தினுள்.

தெய்வத் தமிழ்மொழிப் பெண்ணவள்—இந்த
தேசப் பெருமைக்குக் கண்ணவள்.
வையம் முழுதையும் வாழ்த்துவாள்—பிறர்
வாழ்ந்திடத் தன்சுகம் தாழ்த்துவாள்.

பற்பல ஆயிரம் ஆண்டுகள்—இந்தப்
பாரில் இருந்தறம் பூண்டவள்.
அற்புதம் இன்னமும் கன்னியே!—புது
அழகுதரும் தமிழ் அன்னையே.

# தமிழ்ப் பணி

தமிழன்னைத்திருப் பணிசெய்வோம்
தரணிக் கே ஒரு அணி செய்வோம்
அமிழ்தம் தமிழ்மொழி என்றுரே !
அப்பெயர் குறைவது நன்றுமோ ?

அன்பு நிறைந்தவள் தமிழன்னை,
அருளை அறிந்தவள் தமிழன்னை,
இன்பக் கலைகள் யாவையுமே
ஈன்று வளர்த்திடும் தேவியவள்.

பக்தி நிறைந்தது தமிழ்மொழியே
பரமனைத் தொடர்வது தமிழ்மொழியே
சக்தி கொடுப்பவள் தமிழ்த்தாயே
சமரசம் உரைப்பவள் தமிழ்த்தாயே.

வண்மை மிகுந்திடும் மனமுடையாள்
வாய்மையை வணங்கும் இனமுடையாள்
தண்மை அளித்திடும் இலக்கியத்தாள்
தாரணி புகழ்ந்திடும் இலக்கணத்தாள்.

மாநிலம் முழுதும் ஓர் சமுதாயம்
மக்களுக் கெல்லாம் ஒருநியாயம்
தானென அறிஞர்கள் தலைவணங்கும்
கருமம் வளர்த்தவள் தமிழணங்கே

அன்னிய மொழிகளை அருவருக்கும்
அற்பத் தனங்களை அவள்வெறுக்கும்
நன்னயம் மிகுந்தவள் தமிழ் மாதா
நாகரி கத்தின் தனித்தூதாம்

பற்பல மொழிகளைப் பகுத்தறிந்தாள்
பாருள அறிவினைத் தொகுத்துரைப்பாள்
அற்புத மாகிய மனப்பெருமை
அடங்கிய தேதமிழ் தனிப் பெருமை

மன்னுயிர் அனைத்தையும் தன்னுயிர்போல்
மதிப்பது தமிழ்மொழி முன்னுரையாம்
தன்னலம் துறந்திடும் தகவுடையாள்
தவநெறி வாழ்க்கையின் புகழுடையாள்

அன்னிய வாழ்க்கையின் ஆசையினால்
அன்னையை மறந்தோம் நேசர்களே !
முன்னைய பெருமைகள் முற்றிலுமே
முயன்றால் தமிழகம் பெற்றிடுமே

புதுப்புது ஒளிகளில் அலங்கரிப்போம்
பூரணம் தமிழ்எனத் துலங்கவைப்போம்
மதிப்புடன் படித்தவர் மகிழ்ந்திடுவார்
மாநிலத் தறிஞர்கள் புகழ்ந்திடுவார்.

அன்னிய மொழியே தினம் பேசி
அன்னையைப் பணிந்திட மனம்கூசி
இன்னமும் இருந்தால் தமிழ்மொழியே
இறந்திடும் உனக்கது பெரும்பழியே

தமிழன் என்பதை மறக்காதே
தாய்மொழிப் பெருமையைத் துறக்காதே
'அமிழ்தம் தமிழ்மொழி' ஐயமில்லை
அகிலம் நுகர்ந்திடச் செய்திடுவோம்.

# வெற்றி எது?

வெட்டி வெட்டிக் கொல்லுவார்
வீரம் என்று சொல்லுவார்
சுட்டுச் சுட்டுத் தள்ளுவார்
சூரம் என்று துள்ளுவார்

திட்டித் திட்டி ஏசுவார்
தீரம் என்று பேசுவார்
கட்டு வார்த்தை தீரும் ஓர்
காலம் வந்து சேருமோ!

வீரம் மூட்டி விட்டவர்
வீட்டில் நின்று விட்டவர்
தீரம் சொல்லித் தந்தவர்
தெருவில் பேச வந்தவர்

சூரம் கூறிச் சென்றவர்
சொன்னதோடு நின்றவர்
நேரிற் போரில் சிக்கினோர்
நிரபராதி மக்களே.

கண்ணைக் காலைப் போக்குவார்
கருணை பேசித் தூக்குவார்
புண்ணை ஆறப் பண்ணுவார்
புண்ணியத்தை எண்ணுவார்

வெண்ணை ரொட்டி ஊட்டுவார்
வேறு அன்பும் காட்டுவார்
மண்ணில் இந்த மடமைகள்
மாறும் காலம் அடைவமோ ?

மண்டை வந்த நாளிலே
மரணம் உண்டு தோளிலே
சண்டை போடத் தூண்டித்தான்
சாகச் சொல்ல வேண்டுமா ?

குண்டு போட யுத்தமா ?
கொல்லக் கூட வித்தையா ?
மண்டலத்தில் போரையே
மறந்து போக நேருமா ?

வெற்றி வெற்றி என்பரேல்
வெற்றி பெற்ற தென்னவோ
சுற்று முற்றும் பாரெலாம்
சூரை யான ஊர்களும்

பெற்ற தாய்கள் ஓலமும்
பேய் புகுந்த கோலமும்
இற்றொழிந்த சுற்றமும்
இவைகளேநம் வெற்றி காண் !

துன்பம் வெற்றி பெற்றது
துயரம் வெற்றி பெற்றது
வம்பு தும்பு வாது சூது
வறுமை வெற்றி பெற்றது

அன்பின் வெற்றி அல்லவே
அறிவின் வெற்றி அல்லவே
இன்ப மென்று நாமறிந்த
எதுவும் வெற்றி பெற்றதா ?

யுத்தம் என்ற மோகமும்
உலகை விட்டுப் போகுமா ?
பித்தன் என்று நம்மையே
பேசு வார்கள் பேசின் என் !

புத்தர் வந்து போனதும்
புனிதன் காந்தி வந்ததும்
பொய்த்துப் போக ஒண்ணுமோ ?
புவனி ஓங்கி வாழுமே !

# தேறிய தெளிவு

துன்பம் எனும் பேயே !—நீ
தூரத் தொலைந் தொழிவாய்
இன்பத்தைக் கண்டு கொண்டேன்—உனக்கு
இங்கென்ன வேலையினி ?

துக்கம் எனும் இருட்டே !—ஞான
சூரியன் தோன்றி விட்டான்
பக்கம் வருவதற்கும்—இனி
பாத்தியம் ஏதுனக்கு ?

காமக் கடுங் குறும்பே !—நெற்றிக்
கண்ணை யடைந்து விட்டேன்
தாமதம் செய்வாயேல்—வெந்து
சாம்பல் கதி யடைவாய் !

கோபக் கொடுங் குணமே !—உன்றன்
கொட்டம் அடக்கிடுவேன்
தாபத்துக் கெட்டாத—தெய்வ
சன்னதி என்னது பார் !

சோம்பல் எனும் பிணியே !—உன்றன்
சொந்தத்தை விட்டு விட்டேன்
தேம்பித் திரிபவரை—இனி
தேடிப் பிடித்துக் கொள்ளு

அச்சம் எனும் பகையே !—இனி
அண்டையில் நிற்பாயோ
பச்சைக் குழந்தையைப் போல்—மனப்
பான்மை யடைந்து விட்டேன்

ஆசை மனக் குரங்கே !—உன்றன்
ஆட்சி ஒழிந்தது பார்
காசு பணங்களெல்லாம்—வெறும்
காகிதக் குப்பை கண்டேன்

சூது பொய் வஞ்சனைகாள் !—உங்கள்
சூழ்ச்சி பலிக்காது
நீதி மெய் நேர்மைகளே—கொண்ட
நிச்சய ஞானமுற்றேன்.

வெற்றி எனும் வெறியே !—உன்னை
வென்று விழுங்கி விட்டேன்
மற்றொரு யாரினிமேல்—என்
மனதைக் கலைத்திடுவார் ?

ஆறி அமர்ந்து விட்டேன்—அருள்
ஆண்டவன் சன்னதி முன்
தேறித் தெளிந்த என்னை—எந்த
தீவினை என்ன செய்யும்.

# கவியின் கனவு

கவிபாடிக் கவிபாடிக்
　　காலம் கழிப்பேன்
கவலைகள் யாவையும்
　　விட்டு ஒழிப்பேன்
புவிநாடும் இன்பத்தில்
　　நிம்மதி இல்லை
பூமிக்கப் பாலுள்ள
　　இன்பங்கள் சொல்லும். (கவி)

கண்ணுக்குத் தெரியாத
　　காட்சிகள் காண்பேன்
காதுக்குக் கேளாத
　　கீதங்கள் கேட்பேன்
எண்ணிக்கை யில்லாத
　　இன்பங்கள் நுகர்வேன்
எல்லாரும் இன்புற
　　எங்கெங்கும் பகர்வேன். (கவி)

மூக்கென்றும் முகராத
　　வாசங்கள் மோப்பேன்
முன்னென்றும் தெரியாத
　　நன்னயம் பூப்பேன்
நாக்கென்றும் அறியாத
　　நற்சுவை புசிப்பேன்
நலிசெய்யும் பசியற்ற
　　நாட்டில் வசிப்பேன். (கவி)

உடலத்தில் புதுப்புது
உணர்ச்சிகள் பொங்கும்
உள்ளத்தில் உண்மையும்
ஞானமும் தங்கும்
சடலத்தை பெரிதென்னும்
உலகத்தை மறப்பேன்
சத்திய நித்திய
வானத்தில் பறப்பேன். (கவி)

ஆயிரம் ஆயிரம்
ஆண்டுகள் முன்னே
அப்படியே பல
ஆண்டுகள் பின்னே
போயின வருவன
காட்சிகள் தெரியும்
புதுமையிற் குறையாமல்
என்முன்னே விரியும். (கவி)

தூரமும் காலமும்
துச் சங்களாகும்
துன்பமும் இன்பமும்
தொண்டு செய்தேகும்
நேரமும் கிரகம் என்
நினைவின் படிக்கே
நின்றெந்தன் ஏவலை
செய்து முடிக்கும். (கவி)

# எங்கள் ஜவஹர்

நேருவை நினைத்த வுடன்
நேர்மை குணம் என்னும்
மேருவை நிகர்த்த ஒளி
மின்னி வரும் முன்னல்
பாரிலுவ யாவரும் நம்
பந்து ஜன மென்றே
கோரும் ஒரு மெய்யுணர்வின்
கொள்கைவரும் அன்றோ

ஜவஹரை நினைத்த உடன்
ஜாதி நிற பேதம்
அவனியில் அழிந்தொழிய
ஆர்வம் நமதாகும்
நவநவ உணர்ச்சிகளின்
நன்னெறியை ஊட்டும்
நல்லதுணை வல்லனென
நம்மறிவு காட்டும்

தீமையை எதிர்க்கும் ஒரு
தீரனுளன் என்றும்
வாய்மையை வளர்க்குமொரு
வள்ளலிவன் என்றும்
தூய்மை தவருத முறை
சொல்வளவன் என்றும்
சீமை தோரும் வாழ்த்து
ஜவர்லால் அரிய சீலன்.

சொந்த முள தன்னுடைய
சொத்து சுக மெல்லாம்
வந்தநில மக்கள் சுக
வாழ்வு பெற வென்றே
தந்தைதர மைந்த னிவன்
தான மெனத் தந்தான்
எந்த மொழி எந்த கதை
ஈடு சொல உண்டோ

தன்னல மறுப்பி னுயர்
தன்மை யிது வென்ன
இன்னல்களை இன்ப மென
ஏற்று ஒளி மின்னும்
பொன்னில் மணிவைத்து உயிர்
பெற்றசிலை போலும்
என்ன சொலிப் போற்றுவது
எங்கள் ஜவர் லாலை

ஏழையின் மனக் குறைகள்
இன்ன தெனக் காட்டி
கோழைகளைக் கண்டு கொதி
கொண்ட துயர் கூட்டி
ஊழ்வினையை வெல்லு மொரு
ஓவியமும் ஆகும்
வாழி ஜவர்லால் மகிபன்
வாழி நெடுங் காலம்.

# தமிழ்நாடு வாழ்க

வீரத்தில் நிறைவான தமிழ்நாடு வாழ்க!
வித்தைக்கு உறைவான தமிழ்நாடு வாழ்க!
சூரத்தின் துணையான தமிழ்நாடு வாழ்க!
துஷ்டர்க்குப் பணியாத தமிழ்நாடு வாழ்க!

வாள்கொண்டு நேர்நின்று போர் தந்தபோதும்
வஞ்சங்கள் புரியாத தமிழ்நாடு வாழ்க!
கோள்கொண்டு பொய்சொல்லி குற்றேவல் செய்யா
குணமிக்க ஜனமிக்க தமிழ்நாடு வாழ்க!

கொல்லாமை உயர்வென்னும் தமிழ்நாடு வாழ்க!
கொடை வள்ளல் பலர் நின்ற தமிழ்நாடு வாழ்க!
இல்லாமை அறியாத தமிழ்நாடு வாழ்க!
இரவாமை அறமென்னும் தமிழ்நாடு வாழ்க!

படையாமல் உண்ணாத தமிழ்நாடு வாழ்க!
பகையாரும் எண்ணாத தமிழ்நாடு வாழ்க!
அடையாத துன்பங்கள் அவை வந்தபோதும்
அநியாயம் எண்ணாத தமிழ்நாடு வாழ்க!

